சூரியனானவன், ஸமுதஞ்சித: - மேல்கிளம்பி, ப்ரதிபட - எதிரியான, மஹாப்ரௌட - மிக உயர்ந்து, ப்ரோத்யத் - ப்ர காசிக்கிற கவிதையாகிற, குமுத்வதீம் - ஆம்பல் புஷ்பத்தை, நித்ரா முத்ராம் - நித்திரையால் மூடியதாக், தரஸா - சீக்கிரம், நயதி - செய்கிறது,

ஹிமவத் புத்திரியான ஹே காமாக்ஷியே! உன்னை நமஸ் கரித்தவுடனேயே ஸத்துக்களான கவிகளுக்கு ஸரஸகவிதை யாகிற சூரியன் உதித்து எதிரிகளுடைய கவிதையாகிற ஆம்பல் புஷ்பத்தை வாடி கண்மூடச் செய்கிறது.

शमितजडिमारम्भा कम्पातटीनिकटीचरी
निहतदुरितस्तोमा सोमार्धमुद्रितकुन्तला
फलितसुमनोवाञ्छा पाञ्चायुधी परदेवता
सफलयतु मे नेत्रे गोत्रेश्वरप्रियनन्दिनी ॥ ३३ ॥

ஶமிதஜடிமாரம்பா கம்பாதட நிகடசரீ
நிஹத துரிதஸ்தோமா ஸோமார்த்த முத்ரிதகுந்தலா |
பலித ஸுமனோ வாஞ்சா பாஞ்சாயுதீ பரதேவதா
ஸபலயதுமே நேத்ரே கோத்ரேச்வர ப்ரியநந்திநீ ll [33]

ஶமித ஜடிமாரம்பா - முட்டாள் தனத்தின் ஆரம்பத்தை போக்குகிறவளும், பம்பாதட நிகடசரீ - பம்பைக்கரையின் ஸமீபத்தில் ஸஞ்சரிப்பவளும், நிஹததுரித ஸ்தோமா - பாப ஸமூஹங்களை நாசமாக்குகிறவளும், ஸோமார்த்த - அர்த்த சந்திரனால், முத்ரித - அலங்கரிக்கப்பட்ட, குந்தலா - கேசத் தையுடையவளும், பலிதஸுமநோ வாஞ்சா-தேவர்களுடைய இஷ்டத்தை பலிக்கச் செய்கிறவளும், பஞ்சாயுதீ - ஐந்து ஆயுதங்களை தரிப்பவளும், கோத்ரேச்வர ப்ரியநந்திநீ - பர் வத ராஜனின் பிரியபுத்ரியுமான, பரதேவதா - உத்க்ருஷ்ட தேவதையுமான காமாக்ஷியானவள், மே - என்னுடைய, நேத்ரே-கண்களை, ஸபலயது-பலனுள்ளதாகச் செய்யட்டும்.

பர்வத ராஜனின் புத்ரியும், பஞ்சாயுதம் தரித்து பரதேவ தையாக விளங்குகிறவளும், அக்ஞானத்தைப் போக்கி பாபத்தை நாசம் செய்கிறவளும், ஸத்துக்களுடைய மனோ ரதத்தை பூர்த்தி செய்கிறவளும், அர்த்தசந்திர சிரோபூஷண

மாயுள்ள காமாக்ஷியானவள் எனக்கு தரிசனம் தந்து என் கண்களை ஸபலமாக்கவேணும்.

मम तु धिषणा पीड्या जाड्यातिरेक कथं त्वया
कुमुदसुषमामैत्रीपात्रीवतंसितकुन्तलाम् ।
शमितदुरितस्तम्भां कम्पानदीनिलयामसौ
श्रयति हि गलत्तन्द्रा चन्द्रावतंस सधर्मिणीं ॥ ३४ ॥

மம து திஷணா பீட்யா:ஜாட்யாதிரேக கதம் த்வயா
குமுத ஸுஷமா மைத்ரீ பாத்ரீ வதம்ஸித குந்தளாம் |
ஶமித துரிதஸ்தம்பாம் கம்பாநதீ நிலயாமஸௌ
ஶ்ரயதி ஹி களத்தந்த்ரா சந்த்ரா வதம்ஸ ஸதர்மிணீம் II [34]

ஜாட்யாதிரேக! – எனது மூடத்தனமாகிற குணமே! த்வயா – உன்னால், மம – என்னுடைய, திஷணா – புத்தியானது, கதம் – எப்படி, பீட்யா – பீடிக்கப்படும். அஸௌ – இந்த புத்தியானது, குமுத ஸுஷமா - ஆம்பலுடைய, மைத்ரீ – ஸ்நேகத்திற்கு, பாத்ரீ – பாத்ரமான சந்திர கலையால், வதம்ஸித – பூஷணமாக செய்யப்பட்ட, குந்தலாம் – கேசத்தை உடையவளும், ஶமித துரிதஸ்தம்பாம் – பாபஸமூஹத்தை போக்குகிறவளும், கம்பா நதீ நிலயாம் – கம்பா நதிக் கரையில் உள்ளவளுமான, சந்த்ராவதம்ஸ ஸதர்மிணீம் – சந்திரசேகர பத்நியான காமாக்ஷியையே, களத்தந்த்ரா – சோம்பலில்லாமல், ஶ்ரயதி ஹி–ஆச்ரயித்து நிற்கிறதல்லவா!

என்னுடைய மனதானது கம்பாநதீ தீரவாஸினியும், பாப ஸமூஹத்தைப் போக்குகிறவளும், சந்திரனை சிரோ பூஷணமாகக் கொண்டவளும், சந்திரசேகர பத்நியுமான காமாக்ஷியையே ஆச்ரயித்து நிற்பதால், ஜாட்யமென்கிற கெட்ட குணத்தால் ஆக்ரமிக்கப்படவில்லை.

परिमलपरीपाकोद्रेकं पयोमुचि काञ्चने
शिखरिणि पुनर्द्वैधीभावं शशिन्यरुणातपम् ।
अपि च जनयन्कम्बोर्लक्ष्मीमनम्बुनि कोऽप्यसौ
कुसुमधनुषः काञ्चीदेशे चकास्ति पराक्रमः ॥ ३५ ॥

**பரிமளபரீ பாகோத்ரேகம் பயோமுசி காஞ்சநே**
**சிகரிணி புநர்த்வைதீ பாவம் சசிங்யருணுதபம் |**
**அபி ச ஜநயங் கம்போ: லக்ஷ்மீம் அனம்புநி கோப்யஸௌ**
**குஸுமதனுஷ: காஞ்சீதேஸே சகாஸ்தி பராக்ரம: ll [35]**

பயோமுசி - மேகத்தில் (கேசத்தில்), பரிமளபரீ பாகோத்ரேகம் - வாஸனையின் ஆதிக்கத்தையும், காஞ்சநே சிகரிணி - தங்கமயமான பர்வதத்தில் (ஸ்தனத்தில்), த்வைதீபாவம் - இரண்டாயிக்கும் தன்மையையும், ஸசிநி - சந்திரனில் (முகத்தில்), அருணுதபம் - சிவந்த வெய்யிலையும், அபி ச - மேலும் அநம்புநி - ஜலமில்லாத இடத்தில், கம்போ: - சங்கினுடைய, லக்ஷ்மீம் - சோபையை, ஜயநந் - உண்டுபண்ணி கொண்டும், குஸுமதனுஷ: - மன்மதனுடைய, கோபி - ஒரு, பராக்ரம: - ஸாமார்த்தியமானது, காஞ்சீதேஸே - காஞ்சீ பிரதேசத்தில், சகாஸ்தி - விளங்குகிறது.

காஞ்சீ தேசத்தில் பிரகாசிக்கிற காமாக்ஷியானவள் மன்மதனின் அதிசயமான சாமார்த்திய ரூபமாக விளங்குகிருள். அவளுடைய கேசமாகிற மேகத்தில் உயர்ந்த வாஸனையும் ஸ்தனமாகிற மேரு பர்வதத்தில் இரட்டிப்பும், முகமாகிற சந்திரனில் சூர்ய காந்தியும், ஜலமில்லாத இடத்தில் உண்டான சங்குபோன்ற கழுத்து உள்ளவளாயும் பிரகாசிக்கிருள்.

पुरदमयितुर्वामोत्सङ्गस्थलेन रसज्ञया
सरसकविताभाजां काञ्चीपुरोदरसीमया ।
तटपरिसरैर्नीहाराद्रेर्वचोभिरकृत्रिमैः
किमिव न तुलामस्मच्चेतो महेश्वरि गाहते ॥ ३६ ॥

புரதமயிது: வாமோத்ஸங்க ஸ்தலேன ரஸக்ஞயா
ஸரஸ கவிதாபாஜாம் காஞ்சீபுரோதர ஸீமயா |
தடபரிஸரை: நீஹாராத்ரே: வசோபி ரக்ருத்ரிமை:
கிமிவ ந துலாம் அஸ்மத்சேதோ மஹேச்வரி காஹதே ll [36]

மஹேச்வரி - ஈச்வரியான காமாக்ஷியே! அஸ்மத்சேத: - என்னுடைய மனதானது, புரதமயிது: - புரசத்ருவான பரமசிவனுடைய, வாமோத் ஸங்கஸ்தலேன - இடதுமடிப் பிரதேசத்தோடும், ஸரஸ கவிதாபாஜாம் - ரஸமான கவிதை உள்ளவருடைய, ரஸக்ஞயா - நாக்குடனும், காஞ்சீபுரோதர

ஸீமயா - காஞ்சீ நகர நடு எல்லையுடனும், நீஹாராத்ரே: - ஹிமயமலையினுடைய, தடபரிஸரை: - கரைப் பிரதேசங்களோடும், அக்ருத்ரிமை: - செய்யப்படாத, வசோபி: - வாக்கான வேதங்களோடும், துலாம் - ஸாம்யத்தை, கிமிவ ந காஹதே - ஏன் அடைகிறதில்லை.

காமாக்ஷியே! என்னுடைய மனதானது மஹேச்வரனுடைய இடது மடியோடும், ஸரஸ கவிகளுடைய நாக்குகளுடனும், காஞ்சீ நகர எல்லையுடனும், ஹிமாலயத்தின் கரையுடனும், வேதங்களுடனும் ஏன் ஸாம்யம் அடையவில்லை.

नयनयुगलीमस्माकीनां कदा नु फलेग्रहीं
विदधति गतौ व्याकुर्वाणा गजेन्द्रचमत्क्रियाम् ।
मरकतरुचो माहेशानाः घनस्तननम्रिताः
सुकृतविभवाः प्राञ्चः काञ्चीवतंसधुरंधराः ॥ ३७ ॥

நயநயுகளீமஸ்மாகீநாம் கதா நு பலேக்ரஹீம்
விதததி கதௌ வ்யாகுர்வாணா கஜேந்திர சமத்கிரியாம் |
மரகதருச: மாஹேசாநா: கநஸ்தன நம்ரிதா:
ஸுக்ருத விபவா: ப்ராஞ்ச: காஞ்சீவதம்ஸ துரந்தரா: ll [37]

கதௌ - நடையில், கஜேந்திர சமத்க்ரியாம் - யானையின் அழகை, வ்யாகுர்வாணா: - வெளிப்படுத்துகிறதும், மரகத ருச - மரகதம்போன்ற காந்தியுள்ளவையும், கனஸ்தன நம்ரிதா: - கனமான ஸ்தனத்தால் வணங்கினவையும், காஞ்சீவதம்ஸ துரந்தரா: - காஞ்சீக்கு அலங்காரமாயிருக்கும் நிலைமையை வகிப்பதாயும் இருக்கிற, ப்ராஞ்ச: - புராதனமான மாஹேசாநா: - மஹேச்வரனுடையதான, ஸுக்ருத விபவா: - அதிருஷ்ட விசேஷங்கள், அஸ்மாகீநாம் - என்னுடையதான, நயனயுகளீம் - இரண்டு கண்களையும், பலேக்ரஹீம் - பயனை அடைந்ததாக, கதா நு - எப்பொழுது, விதததி - செய்யுமோ.

கஜம் போன்ற நடை உள்ளவையும், ஸ்தனபாரத்தால் வணங்கியவையும், காஞ்சீ நகர அலங்காரமானவையுமாய் இருக்கிற மஹேச்வரனுடைய புண்யவிசேஷங்கள் (காமாக்ஷி) எப்பொழுது என்னுடைய கண்களை பயனுள்ளவையாகச் செய்யுமோ!

मनसिजयशः पारम्पर्यम्मरन्दझरीसुवां
कविकुलगिरां कन्दं कम्पानदीतटमण्डनम् ।
मधुरललितं मत्कं चक्षुर्मनीषिमनोहरं
पुरविजयिनः सर्वस्वं तत्पुरस्कुरुते कदा ॥ ३८ ॥

மனஸிஜயம: பாரம்பர்யம் மரந்த ஜரீஸுவாம்
கவிகுல கிராம் கந்தம் கம்பாநதீதட மண்டநம் |
மதுர லலிதம் மத்கம் சக்ஷு: மநீஷி மனோஹரம்
புரவிஜயின: ஸர்வஸ்வம் தத் புரஸ்குருதே கதா ll [38]

மனஸிஜ-மன்மதனுடைய, யம: பாரம்பர்யம் - க்யாதிக்கு ரம்பரையாயும், மரந்த ஜரீஸுவாம் - அமிருதத்தை பெருக் கிற, கவிகுல கிராம்-கவிகளுடைய கவனத்திற்கு, காந்தம்- லமாயும், கம்பாநதீதட மண்டனம் – கம்பா நதீதிர அலங் ாரமாயுமுள்ள, மதுர லலிதம் - இனிதாயும் சுலபமாயும், னீஷி மனோகரம் – யோகிகளின் மனதைக்கவருகிறதுமான ர விஜயின: - பரமேச்வரனுடைய, ஸர்வஸ்வம் – ஸகல ஸாத்துப்போல் விளங்கும்வஸ்து (காமாக்ஷி), மத்கம் சக்ஷு: னது நேத்ரத்தை, கதா – எப்போது, புரஸ்குருதே - எதி ல் கொள்ளும்!

மன்மதனுடைய க்யாதி போன்றவளும், கவிகளின் ாக்ஜரிக்கு மூலமாயும், யோகிகளின் மனோரஞ்ஜகியுமான ரமேச்வரரின் ஸர்வஸ்வம்போன்ற காமாக்ஷிதேவி எப்போது னது கண்கள் முன் தோன்றுவாளோ!

शिथिलिततमो जालां नीलारविन्दविलोचनां
दहनविलसत्फालां लीला गताश्रित कांचिकां ।
करधृतलसच्छूलां कालारिचित्तहरां परां
मनसिजधनुः शालामेलालकां समुपास्महे ॥ ३९ ॥

ம்திலித தமோ ஜாலாம் நீலாரவிந்த விலோசனும்
தஹந விலஸத் பாலாம் லீலா கதாச்ரித காஞ்சிகாம் |
கரத்ருத லஸத் சூலாம் காலாரி சித்தஹராம் பராம்
மநஸிஜ தநு: மாலாம் ஏலாலகாம் ஸமுபாஸ்மஹே ll [39]

ஶிதிலித - நாசமாக்கப்பட்ட, தமோ ஜாலாம் - இருள் கூட்டத்தை உடையவளும், நீலாரவிந்த விலோசனாம் - கருநீதல் புஷ்பத்திற்கு ஸமமான நேத்ரங்களையுடையவளும், தஹந விலாஸத் பாலாம் - அக்நியால் விளங்குகிற நெற்றியுள்ளவளும், லீலா கதாஶ்ரித காஞ்சிகாம் - விளையாட்டு நடையாக காஞ்சியை அடைந்தவளும், கரத்ருத லஸத்ஶூலாம் - கையில் தரிக்கப்பட்ட விளங்குகிற சூலமுள்ளவளும், காலாரி - கால சத்ருவான சிவனுடைய, சித்தஹாராம் - மனதை ஆகர்ஷிக்கிறவளும், மனஸிஜ தநு: ஶாலாம் - மன்மதனுடைய ஆயுத சாலையாயும், ஏலாலகாம் - ஏலம் போல் வாஸனையுள்ள கேசமுள்ளவளுமான, பராம் - உத்க்ருஷ்ட தேவதையான காமாக்ஷியை, ஸமுபாஸ்மஹே - உபாஸிக்கிறோம்.

அஞ்ஞான இருளை நீக்குகிறவளும், கருத்த காந்தியுடன் விளங்கும் நேத்ரமுள்ளவளும் நெற்றியில் நெருப்புக்கண் படைத்தவளும், சூலதாரிணியும் பரமசிவன் மனோஹாரிணியுமான அந்த உத்க்ருஷ்ட தேவதையான காமாக்ஷியை நன்கு உபாஸிக்கிறோம்.

कलालीलाशाला कविकुलवचः कैरववनी-
शरज्ज्योत्स्नाधारा शशधरशिशुश्लाघ्यमुकुटी ।
पुनीते नः कम्पापुलिनतटसौहार्दतरला
कदा चक्षुर्मार्गं कनकगिरिधानुष्कमहिषी ॥ ४० ॥

கலா லீலா ஶாலா கவிகுல வச: கைரவ வநீ
ஶரத் ஜ்யோத்ஸ்நாதாரா ஶஶதரஶிஶு ச்லாக்ய முகுடீ |
புனீதே ந: கம்பா புளிந தடஸௌஹார்த்ததரளா
கதா சக்ஷுர்மார்க்கம் கநக கிரிதாநுஷ்க மஹிஷி II [40]

கலா லீலா சாலா - வித்யைகளுக்கு விளையாட்டு மண்டபமாயும், கவிகுலவச: கைரவ வநீ - கவி ஸமூஹத்தின் கவிதாவாக்காகிற ஆம்பல் கூட்டத்திற்கு, சரத் ஜ்யோத்ஸ்நா தாரா - சரத் கால நிலா தாரைபோன்றவளும், ஶஶதரசிசு - பால சந்திரனால், ச்லாக்ய மகுட - விளங்குகிற சிரஸ்ஸுள்ளவளும், கம்பா புளிந தட - கம்பா நதியின் மணல் கரையில், ஸௌஹார்த்த தரளா - ஆசையோடு ஸஞ்சரிப்பவளும்,

நக கிரி – மேரு மலையை, தா நுஷ்க மஹிஷீ - தனுஸ்ஸாகக் காண்ட பரமேச்வரனுடைய பத்நியான காமாக்ஷியானவள், தா – எப்போது, ந: – நம்முடைய, சக்ஷுர் மார்க்கம் – நேத்ர பிரதேசத்தை, புநீதே – பரிசுத்தமாக்குவாளோ!

அறுபத்தி நான்கு கலைகளுக்கும் லீலா மண்டபமாயும், விகளுடைய வாக்குக்கு சரத் கால சந்திரிகை போன்ற வளும், இளம் சந்திரனால் விளங்குகிற சிரஸ் உடையவளும், ம்பா நதீ தீர மணல் திட்டில் ஸஞ்சரிப்பதில் ஆசையுள்ள வளும், மேரு மலையை ஆயுதமாகக் கொண்ட பகவானின் த்நியுமான காமாக்ஷி எப்போது தான் எனதுநேத்ர மார்க் த்தை பரிசுத்தமாக்குவளோ?

नमः स्तान्नम्रेभ्यः स्तन कलश भारेण गुरुणा
दधानेभ्यश्चूडाभरणममृतस्यन्दि शिशिरम् ।
सदा वास्तव्येभ्यः सविधभुवि कम्पाख्यसरितो
यशोव्यापारेभ्यः सुकृतविभवेभ्यः रतिपतेः ॥ ४१ ॥

நமஸ்தாத் நம்ரேப்ய: ஸ்தநகலசபாரேண குருணா
ததாநேப்ய: சூடாபரணமம்ருத ஸ்யந்தி ஶிஶிரம் |
ஸதாவாஸ்தவ்யேப்ய: ஸவிதபுவி கம்பாக்ய ஸரித:
யஶோ வ்யாபாரேப்ய: ஸுக்ருதவிபவேப்ய: ரதிபதே: ॥ [41]

குருணா – பெரிதான, ஸ்தன கலச பாரேண - ஸ்தனங் களின் சுமையால், நம்ரேப்ய: - வணங்கியவையும், அம்ருத ஸ்யந்தி - அம்ருதத்தை வர்ஷிப்பதான, ஶிஶிரம் - குளிர்ந்த சூடாபரணம் - கேச பூஷணத்தை, ததாநேப்ய: - தரிப்ப வையும், கம்பாக்ய ஸரித: - கம்பையென்ற பெயருள்ள நதி யின், ஸவித புவி - ஸமீப தேசத்தில், ஸதா – எப்போதும் வாஸ்தவ்யேப்ய:–வஸிப்பவையும், ரதிபதே:–மன்மதனுடைய, யஶோவ்யாபாரேப்ய: – கீர்த்தியின் கார்யங்களாயுமிருக்கிற, ஸுக்ருத விபவேப்ய: - புண்ய விசேஷங்களின் பொருட்டு, நமஸ்தாத் - நமஸ்காரமிருக்கட்டும்.

குளிர்ந்த அம்ருதத்தை பெருக்குகிற சிரோ பூஷணமுள் ளவளும், ஸ்தந பாரத்தால் வணங்கியவளும் கம்பா தீரவாஸி யும், மன்மதனின் கீர்த்தி கார்யமாயுமிருக்கிற புண்ய விசேஷ

மாக விளங்கும் காமாக்ஷியின் பொருட்டு எனது நமஸ்கார மிருக்கட்டும்.

असूयन्ती काचिन्मरकतरुचो नाकिमुकुटी-
कदम्बं चुम्बन्ती चरणनखचन्द्रांशुपटलैः ।
तमोमुद्रां विद्रावयतु मम काञ्चीनिलयना
हरोत्सङ्गश्रीमन्मणिगृह महा दीप कलिका ॥ ४२ ॥

அஸூயந்தி காசித் மரகத ருசோ நாகி முகுட
கதம்பம் சும்பந்தீ சரணநக சந்த்ராம்சு படலை: |
நமோ முத்ராம் வித்ரா வயது மம காஞ்சீ நிலயநா
ஹரோத்ஸங்க ஸ்ரீமந் மணி க்ருஹ மஹா தீபகலிகா ||    [42]

மரகதருச:–மரகத ரத்நத்தின் காந்திக்கு, அஸூயந்தீ–எதிரியாயும், சரண நக சந்த்ராம்சு படலை: – தனது கால் நக மாகிற சந்த்ரனின் தேஜஸ் ஸமூஹத்தால், நாகிமுகுட கதம் பம் – தேவர்களின் கிரீட ஸமூஹத்தை, சும்பந்தீ – ஸ்பர்சிப் பதாயும், ஹரோத்ஸங்க – சிவனுடைய மடியாகிற, ஸ்ரீமந் மணிக்ருஹ – அழகிய ரத்ந கிரஹத்திற்கும், மஹா தீப கலிகா – பெரிய விளக்குச்சுடராயுமுள்ள, காசித் - ஒரு, காஞ்சீ நிலயநா – காஞ்சீ வாஸியான தேவதையானது, மம– என்னுடைய, தமோ முத்ராம் – அக்ஞானமாகிற இருள் முடிச்சை, வித்ராவயது – நீக்கட்டும்.

மரகத காந்தி போன்ற சரீர காந்தி பொருந்தியவளும் நமஸ்கரிக்கிற தேவர்களின் கிரீடத்தை ஸ்பர்சிக்கிற தனது சரண நக காந்தியையுடையவளும், பரமசிவனுடைய மடியா கிற மங்கள கிருஹத்தில் மஹா தீபம் போல் விளங்குகிற வளுமான 'காஞ்சீவாஸி தேவதையானவள் எனது அக் ஞானமாகிற இருளை நீக்கட்டும்.

अनाद्यन्ता काचित्सुजननयनानन्दजननी
निरुन्धाना कान्ति निजरुचिविलासैर्जलमुचाम् ।
स्मरारेस्तारल्यं मनसि जनयन्ती स्वयमहो
गलत्कम्पा शम्पा परिलसति कम्पापरिसरे ॥ ४३ ॥

அநாத்யந்தா: காசித் ஸுஜந நயநாநந்த ஜநநீ
நிருந்தாநா காந்திம் நிஜருசி:விலாஸை: ஜலமுசாம் |
ஸ்மராரே: தாரள்யம் மநஸி ஜநயந்தீ ஸ்வயமஹோ
கலத்கம்பா சம்பா பரிலஸதி கம்பா பரிஸரே ll [43]

அநாத்யந்தா – உத்பத்தி முடிவற்றதும், ஸுஜந நயநா நந்த ஜநநீ – ஸஜ்ஜனங்களின் கண்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பதும், நிஜருசி விலாஸை: – தனது காந்தி விலாஸத்தால், ஜலமுசாம் – மேகங்களுடைய, காந்திம் – சோபையை, நிருந்தாநா – தடை செய்கிறதாயும், ஸ்மராரே: – மன்மதனுடைய, மநஸி – மனதில், தாரள்யம் – சஞ்சலத் தன்மையை, ஜநயந்தீ - உண்டாக்குகிறதும், கலத்கம்பா – அசைவு அற்றதுமான, காசித் – ஒரு, சம்பா - மின்னலானது, (காமாக்ஷி) கம்பா பரிஸரே – கம்பாநதீ ஸமீபத்தில், ஸ்வயம்-ஸ்வதந்திரமாக (மேகமில்லாமல்), பரிலஸதி – விளங்குகிறது. அஹோ - ஆச்சரியம்!

கம்பாநதீதீரத்தில் காமாக்ஷியானவள் ஓர் அதிசய மின்னல் கொடியாக விளங்குகிருள். இந்த மின்னலுக்கு உத்பத்தி நாசமில்லாமல் ஸ்திரமாயிருக்கிறது. இது ஸஜ்ஜன நேத்திரங்களுக்கு ஆனந்தம் கொடுக்கிறது. அசைவற்றது. தானுகத் தனியாகவே இருக்கிறது. மன்மதன் மனதிற்கு ஆட்டம் கொடுப்பது. இத்தகைய அபூர்வ மின்னலாக காமாக்ஷி விளங்குவது அதிசயமாகிறது.

सुधाडिण्डीरश्रीः स्मितरुचिषु तुण्डीरविषयं
परिष्कुर्वाणासौ परिहसितनीलोत्पलरुचिः ।
स्तनाभ्यामानम्रा स्तबकयतु मे काङ्क्षिततरुं
दृशामैशानीनां सुकृतफलपाण्डित्यगरिमा ॥ ४४ ॥

ஸுதா டிண்டீரச்ரீ: ஸ்மிதருசிஷு துண்டீர விஷயம்
பரிஷ்குர்வாணஸௌ பரிஹஸித நீலோத்பல ருசி: |
ஸ்தநாப்யாமாநம்ரா ஸ்தபகயதுமே காங்க்ஷித தரும்
த்ருசாமைசாநீநாம் ஸுக்ருத பல பாண்டித்ய கரிமா ll [44]

ஸ்மித ருசிஷு – சிரிப்பு காந்தியில், ஸுதா டிண்டீரச்ரீ:– அமிருதத்தின் ஆடைபோன்ற சோபையுள்ளவளும், துண்டீர

விஷயம் – துண்டீர பிரதேசமான காஞ்சியை, பரிஷ்குர்வாணு – அலங்காரமுள்ளதாகச் செய்கிறவளும், பரிஹஸித நீலோத்பல ருசி: - பரிஹாஸம் செய்யப்பட்ட நீலோத்பல காந்தியை உடையவளும், ஸ்தநாப்யாம் - ஸ்தநங்களால், ஆநம்ரா - சிறிது குனிந்தவளும், ஈசாநீநாம் – பரமேச்வரனுடையவை யான, த்ருசாம் - கண்களுடைய, ஸுக்ருத பல பாண்டித்ய கரிமா – நற்பயனுடைய பாண்டித்யத்தின் உயர்வாகவும் விளங்குகிற, அஸௌ - காமாக்ஷி தேவியானவள், மே -- என்னுடைய, காங்க்ஷித தரும் – மனோரதமாகிற விருக்ஷத்தை, ஸ்தபகயது - புஷ்பமுள்ளதாகச் செய்யட்டும்.

அம்ருதத்தின் ஆடைபோன்ற சிரிப்பு காந்தியுள்ளவளும் நீலோத்பல காந்தியை ஏளனம் செய்கிற சரீர சோபையுள்ள வளும், காஞ்சீ நகரத்தை அலங்கரிப்பவளும், பரமேச்வர னுடைய கண்களின் ஸுக்ருதம்போல் விளங்குகிறவளுமான காமாக்ஷிதேவி எனது ஆசையாகிற விருக்ஷத்தை புஷ்பிக்கச் செய்யட்டும்.

कृपाधाराद्रोणी कृपणधिषणानां प्रणमतां
निहन्त्री संतापं निगममकुटोत्तंसकलिका ।
परा काञ्चीलीलापरिचयवती पर्वतसुता
गिरां नीवी देवी गिरिशपरतन्त्रा विजयते ॥ ४५ ॥

க்ருபாதாராத்ரோணீ க்ருபண திஷணாநாம் ப்ரணமதாம்
நிஹந்த்ரீ ஸந்தாபம் நிகம மகுடோத்தம்ஸ கலிகா |
பரா காஞ்சீ லீலா பரிசயவதீ பர்வதஸுதா
கிராம் நிவீ தேவீ கிரிச பரதந்த்ரா விஜயதே ॥ [45]

ப்ரணமதாம் - நமஸ்கரிக்கிற, க்ருபண திஷணாநாம் – அக்ஞானிகளுக்கு, க்ருபாதாராத்ரோணீ - கருணை தாரை நிறைந்த நீர் தொட்டியாயும், ஸந்தாபம் - ஸம்ஸாராதி தாபத்தை, நிஹந்த்ரீ - நீக்குகிறவளாயும், நிகம மகுடோத்தம்ஸ கலிகா – வேதங்களின் சிகரமாகிய வேதங்களின் சிரோ பூஷண பூங்கொத்தாயும், காஞ்சீ லீலா பரிசயவதீ - காஞ்சியில் விளையாடுவதில் ஈடுபட்டவளும், கிராம் நீவீ – வாக்குகளுக்கு முடிச்சு ஸ்தானமாயும், கிரிச பரதந்த்ரா – பரமசிவனுக்குள்பட்டவளாயுமிருக்கிற, பர்வத ஸுதா – பர்வதபுத்ரி

யான காமாக்ஷி தேவியானவள், பரா – ஸர்வோத் க்ருஷ்டை யாக, விஜயதே - விளங்குகிறாள்.

அக்ஞானிகளுக்கு கருணைப்ரவாஹம் நிறைந்த நீர் தேக் கம் போலிருந்து ஸந்தாபத்தை நீக்குகிறவளும் வேதாந்தங் களுக்கு சிரோபூஷண புஷ்பமாயும், வாக்குகளுக்கு மர்ம ஸ்தானமாயுமுள்ள பரதேவதையான தேவீ ஸர்வோத் கிருஷ்டையாக விளங்குகிறாள்.

> कवित्वश्रीकन्दः सुकृतपरिपाटी हिमगिरे-
> विधात्री विश्वेषां विषमशरवीरध्वजपटी ।
> सखी कम्पानद्याः पदहसितपाथोजयुगली
> पुराणी पायान्नः पुरमथनसाम्राज्यपदवी ॥ ४६ ॥

> கவித்வஶ்ரீ கந்த: ஸுக்ருத பரிபாடீ ஹிமகிரே:
> விதாத்ரீ விச்வேஷாம் விஷமஶர வீரத்வஜபடீ |
> ஸகீ கம்பாநத்யா: பத ஹஸித பாதோஜ யுகளீ
> புராணீ பாயாந்ந: புர மதன ஸாம்ராஜ்ய பதவீ ॥ [46]

கவித்வஶ்ரீ கந்த: - கவிதா சோபைக்கு மூல ஸ்தான மாயும், ஹிமகிரே: – ஹிமபர்வதத்தின், ஸுக்ருத பரிபாடீ – அதிருஷ்டத்தின் சின்னமாயும், விஸ்வேஷாம் - ஜகத்துக் களுக்கு, விதாத்ரீ – உத்பத்தி செய்கிறவளும், விஷமஶர வீரத்வஜபடீ - மன்மதனுக்கு வீரத்வஜ படம் போன்றவளும், கம்பாநத்யா: ஸகீ - கம்பா நதிக்கு ஸகியாயும், பதஹஸித பாதோஜயுகளீ - தனது இரு பாதங்களால் ஏளனம் செய்யப் பட்ட தாமரை பூவை உடையவளும், புரமதன ஸாம்ராஜ்ய பதவீ - புராரியான பகவானுடைய ஸாம்ராஜ்ய ஸ்தானம் போன்றவளுமான, புராணீ – ஆத்யந்த ரஹிதமான தேவி யானவள், ந: - நம்மை, பாயாத் - காக்கட்டும்

கவிதா லக்ஷ்மிக்கு மூல ஸ்தானமாயும், ஹிமவானின் அதிருஷ்டமாயும், ஜகத் ஸிருஷ்டி கர்த்ரீயாகவும், மன்மத னின் த்வஜபடம் போன்றவளும், புராரியான பகவானுடைய ஸாம்ராஜ்யமாயும், தாமரை சோபையை ஏளனம் செய்கிற பதகமலமுள்ளவளுமான புராதந வஸ்துவான காமாக்ஷி தேவி நம்மை ரக்ஷிக்கட்டும்.

दरिद्राणा मध्ये दरदलिततापिञ्छसुषमाः
स्तनाभोगक्लान्तास्तरुणहरिणाङ्काङ्कितकचाः ।
हराधीना नानाविबुधमुकुटीचुम्बितपदाः
कदा कम्पातीरे कथय विहरामो गिरिसुते ॥ ४७ ॥

தரித்ராணு மத்யே தரதளித தாபிஞ்ச ஸுஷமா:
ஸ்தநாபோக க்லாந்தா: தருணஹரிணங்காங்கித கசா: |
ஹராதீனு: நாநாவிபுத முகுட சும்பிதபதா:
கதா கம்பாதீரே கதய விஹராமோ கிரிஸுதே ॥ [47]

மத்யே – இடுப்பில், தரித்ராணு: – சிறுத்தவைகளும், தரளித – பூத்த, தாபிஞ்ச – காசாம்பூவினுடைய, ஸுஷமா: – சோபையை உடையவளும், ஸ்தநாபோகக்லாந்தா: – ஸ்தன பாரத்தினுல் சிரமமடைந்தவைகளும், தருணஹரிணங்க – இளம் சந்திரனுல், அங்கிதகசா: – அலங்கரிக்கப்பட்ட கேச த்தை உடையவைகளும், ஹராதீனு: – பரமசிவனுக்கு ஸ்வா தீநமாயும், நாநாவிபுத – அநேக தேவதைகளின் (வித்வான் கள்), முகுடசும்பித பதா: – சிரஸ்ஸால் முத்தமிடப்பட்ட பாதங்களையுடையவைகளுமாக, கம்பாதீரே – கம்பை நதிக் கரையில், கதா – எப்போது விஹராம: – விளையாடுவோம், கிரிஸுதே! பார்வதி தேவியே! கதய – சொல்லுவாயாக.

கவி தனக்கு காமாக்ஷி தேவியின் ஸாருப்யம் எப்போது கிடைக்குமென்று பிரார்த்திக்கிறுர்.

பர்வத புத்ரியான காமாக்ஷி தேவியே! இடுப்பில் சிறுத் தும், காசம்பூவின் காந்தியுள்ளதும், ஸ்தநபாரத்தால் களைப் புற்றதும், சந்திரனை அலங்காரமாகக்கொண்ட கேசமுள்ள தும், தேவர்களின் தலைக்கிரீடத்தால் ஸ்பர்சிக்கப்பட்ட திரு வடியை உடையதுமான ரூபம் பெற்று ஹராதீனமாக நான் கம்பா தீரத்தில் எப்போது விளையாடுவேன்? சொல்லு வாயாக.

वरीवर्तु स्थेमा त्वयि मम गिरां देवि मनसो
नरीनर्तु प्रौढा वदनकमले वाक्यलहरी ।
चरीचर्तु प्रज्ञाजननि जडिमा नः परजने
सरीसर्तु स्वैरं जननि मयि कामाक्षि करुणा ॥ ४८ ॥

**வரீவர்த்து ஸ்தேமா த்வயி மம கிராம் தேவி!:மநஸோ**
**நரீநர்த்து ப்ரௌடா வதந கமலே வாக்யலஹரீ |**
**சரீசர்த்து ப்ரக்ஞா ஜநநி ஜடிமா ந: பரஜநே**
**ஸரீஸர்த்து ஸ்வைரம் ஜநநி மயி காமாக்ஷி கருணா ll [48]**

ஜநநி!-தாயே!, கிராம் தேவி!-வாக்தேவியே! காமாக்ஷி-காமாக்ஷி தேவியே!, மம-எனது, மநஸ: – மனதின், ஸ்தேமா – இருப்பானது, த்வயி - உன்னிடம், வரீவர்த்து – ஸ்திரமாயிருக்கட்டும், வதந கமலே – தாமரைபோன்ற வாக்கில், ப்ரௌடா–கம்பீரமான, வாக்யலஹரீ – வாக்பிரவாஹமானது, நரீநர்த்து - நன்கு நர்த்தனம் செய்யட்டும்! ப்ரக்ஞாஜநநி!–அறிவை அளிப்பவளே!, ந: பரஜநே - நமது எதிரி ஜனத்திடம், ஜடிமா – அக்ஞானமானது, சரீசர்த்து - ஸஞ்சரிக்கட்டும், கருணா – தயையானது, ஸ்வைரம் – தன்னிச்சைப்படி, மயி – என்னிடம், ஸரீஸர்த்து – பிரவஹிக்கட்டும்.

அக்ஞானத்தை நீக்கி அறிவை அநுக்ரஹிக்கும் தேவியான காமாக்ஷியே! உன்னிடம் எனது மனது ஸ்திரமாக ஊன்றியிருக்கவும், கம்பீரமான வாக்பிரவாஹம் வளரவும், எதிரிகளிடம் அக்ஞானம் நடமாடவும் கருணாப்பிரவாஹம் என்னிடம் பரவவும் நீ அநுக்ரஹிப்பாயாக.

क्षणात्ते कामाक्षि भ्रमरसुषमाशिक्षणगुरुः
कटाक्षव्याक्षेपो मम भवतु मोक्षाय विपदाम् ।
नरीनर्तु स्वैरं वचनलहरी निर्जरपुरी-
सरिद्वीचीनीचीकरणपटुरास्ये मम सदा ॥ ४९ ॥

**க்ஷணாத்தே காமாக்ஷி! ப்ரமர ஸுஷமாசிக்ஷண குரு:**
**கடாக்ஷவ்யாக்ஷேபோ மம பவது மோக்ஷாய விபதாம் |**
**நரீநர்த்து ஸ்வைரம் வசநலஹரீ நிர்ஜரபுரீ**
**ஸரித்வீசீ நீசீகரண படுராஸ்யே மம ஸதா ll [49]**

காமாக்ஷி - காமாக்ஷியே! ப்ரமர ஸுஷமா – வண்டுகளின் அழகை, சிக்ஷண குரு: – சிக்ஷிப்பதில் ஆசார்யன் போன்ற, தே – உனது, கடாக்ஷ வ்யாக்ஷேப: – கடாக்ஷ பாதமானது, மம – என்னுடைய, விபதாம் – ஆபத்துக்களுடைய, க்ஷணாத் மோக்ஷாய – க்ஷணத்தில் விடுதலையின் பொருட்டு, பவது –

ஆகட்டும். நிர்ஜ்ஜரபுரீ ஸரித் – தேவலோக நதியான கங்கையின், வீசீநீசீகரணபடு: – அலையை தாழ்த்துவதில் ஸாமர்த்யமுள்ள, வசநலஹரீ - வாக்பிரவாஹமானது, மம - என்னுடைய, ஆஸ்யே - வாக்கில், ஸதா - எப்போதும், ஸ்வைரம் – ஸ்வதந்திரமாக, நரீநர்த்து – நர்த்தனம் செய்யட்டும்.

காமாக்ஷி தேவியே! வண்டுகளின் அழகை சிக்ஷிக்கும் உனது கடைக்கண் பார்வையானது எனது ஆபத்துக்களை நிவர்த்திக்க உதவவேண்டும். கங்கா பிரவாஹத்தை கீழ்ப்படுத்தும் தன்மையுள்ள வாக்ஜரியும் என் வாக்கில் எப்போதும் நர்த்தனம் செய்யவேண்டும்.

पुरस्तान्मे भूयः प्रशमनपरः स्तात्भवरुजां
प्रचारस्ते कम्पातटविहृतिसंपादिनि शिवे: ।
इमां याञ्चामूरिकुरु जननि दूरीकुरु तमः-
परीपाकं मत्कं सपदि बुधलोकं च नय माम् ॥ ५० ॥

புரஸ்தாந்மே பூய: ப்ரசமந பர: ஸ்தாத் பவருஜாம்
ப்ரசாரஸ்தே கம்பாதட விஹ்ருதி ஸம்பாதிநி ஶிவே
இமாம் யாச்ஞாமுரீ குரு ஜநநி தூரீகுரு தம:
பரீபாகம் மத்கம் ஸபதி புதலோகம் ச நய மாம் ॥ [50]

கம்பாதட விஹ்ருதி ஸம்பாதிநி! – கம்பைக்கரையில் விளையாடல் செய்கிற, சிவே! - மங்களகரையான, ஜநநி - தாயே!, தே-உன்னுடைய, ப்ரசார: - ஸஞ்சாரமானது, மே - எனது, புரஸ்தாத்-முன்னிலையில், பூய: - பெரிய, பவருஜாம்–ஸம்ஸார வ்யாதிக்கு, ப்ரஸமநபர: - சமனம் செய்வதாக, ஸ்தாத் – இருக்கவேணும். இமாம்யாச்ஞாம் – இந்த பிரார்த்தனையை, ஊரீகுரு - அங்கீகரிப்பாயாக. மத்கம் – என்னுடையதான, தம: பரீபாகம் - அக்ஞான நிவிருத்தியை, தூரீகுரு - துரத்துவாயாக, ஸபதி – சீக்ரம், மாம் - என்னை, புதலோகம் – தேவலோகத்திற்கு, நய ச - போகச்செய்வாயாக.

கம்பா நதிக்கரையில் விளையாடுகிற, தாயே! என்னுடைய ஸம்ஸாரவினையைத் தீர்க்கும் உனது ஸஞ்சாரமானது என் முன்பு தோன்றவேணும். இந்த பிரார்த்தனையை அங்கீகரித்து தேவலோகத்திற்கும் என்னைப் போகச் செய்வாயாக.

उदञ्चन्ती काञ्चीनगरनिलये त्वत्करुणया

समृद्धा वाग्धाटी परिहसितमाध्वी कवयताम् ।

उपादत्ते मारप्रतिभट जटाजूटमुकुटी-

कुटीरोल्लासिन्याः शतमखतटिन्या जयपटीम् ॥ ५१ ॥

உதஞ்சந்தீ காஞ்சீநகர நிலயே த்வத்கருணயா ஸம்ருத்தா
வாக்தாடீ பரிஹஸித மாத்வீ கவயதாம் |
உபாதத்தே மாரப்ரதிபட ஜடாஜூட முகுடீ
குடீரோல்லாஸின்யா: சதமக தடின்யா: ஜயபடீம் ll [51]

காஞ்சீ நகர நிலயே! – காஞ்சீ நகரத்தை வாசஸ்தலமாகக் கொண்ட காமாக்ஷியே! த்வத்கருணயா – உனது தயையால், கவயதாம் – கவிகளுக்கு, உதஞ்சந்தீ – உண்டாகிறதும், ஸம்ருத்தா – அபரிமிதமாயும், பரிஹஸிதமாத்வீ – பரிஹஸிக்கப்பட்ட அமிர்தத்தையுடையதுமான, வாக்தாடீ – வாக்ஜரியானது, மாரப்ரதிபட – மன்மத எதிரியான பரமேசனுடைய, ஜடாஜூட முகுடீ – சடையான க்ரீடமாகிற, குடீர – பொந்தில், உல்லாஸின்யா: – விளங்குகிற, சதமக தடின்யா: – தேவேந்திர நதியான கங்கையின், ஜயபடீம்-ஜயத்வஜத்தை உபாதத்தே - அபஹரிக்கிறது.

தேவியினுடைய கருணையால் கவிகளுக்கு உண்டாகும் விதா வாக்ஜரியானது அமிர்தத்தையும் திரஸ்கரித்து, வகத்தில் பரமசிவனின் ஜடையாகிற பொந்தில் விளங்குகிற தவகங்கையின் வெற்றிக்கொடியையும் அபஹரிக்கிறது.

श्रियं विद्यां बुद्धिं जगति नमतां त्वामथयशः

सुपुत्रान् प्रादत्ते तव झटिदि कामाक्षि करुणा ।

त्रिलोक्यामाधिक्यं त्रिपुरपरिपन्थिप्रणयिनि

प्रणामस्त्वत्पादे शमितदुरिते किं न कुरुते ॥ ५२ ॥

ஶ்ரியம் வித்யாம் புத்திம் ஜகதி நமதாம் த்வாமத யஶ:
ஸுபுத்ரான் ப்ராதத்தே தவ ஜடிதி காமாக்ஷி கருணா |
த்ரிலோக்யா மாதிக்யம் த்ரிபுர பரிபந்தி ப்ரணயினி!
ப்ரணாம: த்வத்பாதே ஶமித துரிதே கிம் ந குருதே ll [52]

த்ரிபுர பரிபந்தி ப்ரணயிநி ! – த்ரிபுராஸுரனுக்கு எதிரியான பரமசிவபத்நியே!, காமாக்ஷி-காமாக்ஷி, ஜகதி-உலகில், த்வாம் – உன்னை, நமதாம் - வணங்குகிறவர்களுக்கு, தவ – உன்னுடைய, கருணா – கிருபையானது, ஸ்ரியம் - ஸம்பத்தையும், வித்யாம் - படிப்பையும், புத்திம் - புத்தியையும், அத-மேலும் யஶ: - கீர்த்தியையும், ஸுபுத்ரான்-ஸத்புத்ரர்களேயும், ஜடிதி – சீக்கிரம், ப்ராதத்தே – கொடுக்கிறது. மேலும், த்ரைலோக்யாம் - மூன்று உலகிலும், ஆதிக்யம் – உயர்வையும் கொடுக்கிறது. சமித துரிதே - பாபத்தை நீக்குகிற, த்வத் பாதே – உன் சரணங்களில் செய்யப்படும், ப்ரணாம: – நமஸ்காரமானது, கிம் – எதைத்தான், ந குருதே - செய்யவில்லே.

காமாக்ஷியை நமஸ்கரிப்பவர்களுக்கு அவளுடைய கருணையானது ஐச்வர்யம், வித்யை, ஞானம் ஸத்புத்ராதிகள் பலவற்றைக் கொடுக்கிறது. திரிலோக ஆதிக்யத்தையும் கொடுக்கிறது. காமாக்ஷி தேவியே! உனது திருவடிகளில் செய்யும் நமஸ்காரமானது எந்த க்ஷேமத்தைத்தான் தராது? எல்லாவற்றையும் கொடுக்கும்.

मनः स्तम्भं स्तम्भं गमयदुपकम्पं प्रणमतां
सदालोलं नीलं चिकुरजितलोलम्बनिकरम् ।
गिरां दूरं स्मेरं धृतशशिकिशोरं पशुपते-
र्दृशां भोग्यं योग्यं तुहिनगिरिभाग्यं विजयते ॥ ५३ ॥

மன்ஸ்தம்பம் ஸ்தம்பம் கமயத் உபகம்பம் ப்ரணமதாம்
ஸதாலோலம் நீலம் சிகுரஜித லோலம்ப நிகரம் |
கிராம் தூரம் ஸ்மேரம் த்ருதஶஶி கிஶோரம் பஶுபதே:
த்ருஶாம் போக்யம் யோக்யம் துஹிநகிரி பாக்யம் விஜயதே ||

ப்ரணமதாம் – நமஸ்கரிப்பவர்களுடைய, ஸ்தம்பம் ஸ்தம்பம் - மிகவும் ஸ்தம்பித்திருக்கிற, மன: – மனஸ்ஸை, உபகம்பம் – கம்பாநதிக்கு ஸமீபமாக, கமயத் – சேர்ப்பிப்பதாயும், ஸதாலோலம் - ஸத்துக்களே ஸந்தோஷப்படுத்துவதாயும், நீலம் – கருத்ததாயும், சிகுரஜித - கேசங்களால் ஜயித்த, லோலம்ப நிகரம் - வண்டு ஸமூஹத்தை உடையதும், கிராம் தூரம் – வாக்குக்கு எட்டாததாயும், ஸ்மேரம் - அழகாயும், க்ருத ஶஶி கிசோரம் - சிரஸ்ஸில் தரித்த பாலசந்திரனே

டையதும், பசுபதே: – பசுபதியான பகவானுடைய, த்ருஸாம் – கண்களுக்கு, போக்யம் – உத்ஸாஹகரமாயும், யோக்யம் – யோக்யமாயுமிருக்கிற, துஹிந கிரிபாக்யம் – ஹிமவத் பர்வதத்தின் அதிஷ்டமான வஸ்துவானது (காமாக்ஷி) விஜயதே – விளங்குகிறது.

நமஸ்கரிக்கிறவர்களுடைய மந்தமான மனஸைக்கூட கம்பா நதீ ஸமீபம் இழுக்கிறவளும், ஸத்துக்களுக்கு ஆச்ரயமாயும், கறுத்தகேச பாசமுள்ளவளும், வாக்குக்கு எட்டாத மஹிமையுள்ளவளும், பரமசிவனின் கண்களுக்கு போக்யமாயுமுள்ள ஹிமவத் பர்வத பாக்யமான காமாக்ஷிதேவி ஸர்வோத்க்ருஷ்டையாக விளங்குகிறாள்.

घनश्यामान्कामान्तकमहिषि कामाक्षि मधुरा-
न्दृशां पातानेतानमृतजलशीताननुपमान् ।
भवोत्पाते भीते मयि वितर नाथे दृढभव-
न्मनःशोके मूके हिमगिरिपताके करुणया ॥ ५४ ॥

கனஶ்யாமான் காமாந்தக மஹிஷி காமாக்ஷி மதுரான்
த்ருஶாம் பாதான் ஏதான் அம்ருத ஜலஶீதானனுபமான் |
பவோத் பாதே பீதே மயி விதர நாதே த்ருடபவந்
மனஶ்ஶோகே மூகே ஹிமகிரிபதாகே கருணயா ॥ [54]

காமாந்தகமஹிஷி!-மன்மத சத்ருவான பரமசிவபத்நியே, ஹிமகிரிபதாகே! – ஹிமயமலேயின் கொடிபோன்றவளும், நாதே! லோகநாதையாயுமிருக்கிற காமாக்ஷியே!, கனச்யாமான் – மேகம்போல் கருத்தவையும், மதுரான் – இனியவையும், அம்ருதஜல சீதரன் – அமிர்தஜலம் போல் குளிர்ந்தவையும், அனுபமான் – இணையற்றவையாயுமிருக்கிற, த்ருசாம் பாதான் – கடாக்ஷ வீக்ஷணங்களே, பவோத்பாதேபீதே– ஸம்ஸாரமாகிற ஆபத்தில் பயந்தவனும், த்ருடபவன் மனஶ்ஶோகே – த்ருடமாக ஏற்பட்டுள்ள மனஸ்சோகமுள்ளவனும் மூகே – ஊமையாயுமிருக்கிற மயி – என்னிடம், கருணயா – க்ருபையால், விதர – வீசுவாயாக.

ஹிமவானின் குலக்கொடியும், மன்மதாந்தக சிவபத்நியும், உலகயஜமானியுமான காமாக்ஷியே! மேகம்போல் கருத்து அழகாயும், அம்ருதம்போல் குளிர்ந்து இணையற்ற

தாயுமுள்ள உனது கடாக்ஷத்தை ஸம்ஸாரஸங்கடத்தில் பீதியடைந்து பலமான மனஸ்சோகமடைந்துள்ள என்னி டம் தயையால் வீசுவாயாக!

नतानां मन्दानां भवनिगलबन्धाकुलधियां
महान्ध्यं रुन्धानामभिलषितसंतानलतिकाम् ।
चरन्तीं कम्पायास्तटभुवि सवित्रीं त्रिजगतां
स्मरामस्तां नित्यं स्मरमथनजीवातुकलिकाम् ॥ ५५ ॥

நதானும் மந்தானும் பவநிகள பந்தாகுல தியாம்
மஹாந்த்யம் ருந்தானும் அபிலஷித ஸந்தான லதிகாம் |
சரந்தீம் கம்பாயா: தடபுவி ஸவித்ரீம் த்ரிஜகதாம்
ஸ்மராம: தாம் நித்யம் ஸ்மர மதன ஜீவாது கலிகாம் ॥ [55]

மந்தானும் – அக்ஞானிகளாகிய, பவநிகள பந்தாகுல தியாம் – ஸம்ஸாரமாகிற விலங்குக்கட்டுகளால் கலங்கிய மனதுள்ள, நதானும் - பக்தர்களுடைய, மஹாந்தயம் - பெரிய இருளை, ருந்தானும்-போக்குகிறவளும், அபிலஷித ஸந்தான லதிகாம் – பக்தர்களுடைய இஷ்டங்களுக்கு ஸந்தான விருக்ஷ கொடி போன்றவளும், கம்பாயா: – கம்பா நதியின், தடபுவி - கரைபிரதேசத்தில், சரந்தீம் – உலாத்துகிறவளும், த்ரிஜகதாம் - மூன்று உலகத்திற்கும், ஸவித்ரீம் – உத்பத்தி காரியாயும், ஸ்மரமதனஜீவாது கலிகாம் - மன்மதசத்ருவான மஹேச்வரனுக்கு உயிர் ஊட்டும் பூங்கொத்து போன்றவளு மான, தாம் – அந்த காமாக்ஷிதேவியை, நித்யம் - எப்போ தும், ஸ்மராம: – த்யானிப்போம்.

ஸம்ஸாரமாகிற விலங்கின் பந்தத்தால் வருந்திய பக் தர்களுடைய அக்ஞானத்தைப்போக்கி இஷ்டஸித்தியை செய்வதில் கல்பக விருக்ஷக் கொடிபோன்றவளும், மூன்று உலக ஸ்ருஷ்டிகாரிணியும் பரமசிவனின் உயிர்ஸ்தானமாயு முள்ள அந்த ஸ்ரீ காமாக்ஷியை எப்போதும் த்யானிப்போம்.

परा विद्या हृद्याश्रितमदनविद्या मरकत-
प्रभानीला लीलापरवशितशूलायुधमना: ।
तम: पूरं दूरं चरणनतपौरंदरपुरी-
मृगाक्षी कामाक्षी कमलतरलाक्षी नयतु मे ॥ ५६ ॥

பராவித்யா ஹ்ருத்யாச்ரித மதனவித்யா மரகத
ப்ரபா நீலா லீலா பரவசித சூலாயுத மனு: |
தம: பூரம் தூரம் சரணநத பௌரந்தர புரீ
ம்ருகாக்ஷீ காமாக்ஷீ கமல தரளாக்ஷீ நயது மே || [56]

பராவித்யா - உயர்ந்த ஸ்ரீ வித்யையாயும், ஹ்ருத்யா – மனஸுக்கு இன்பமளிப்பவளும், ஆச்ரிதமதன வித்யா – மன்மத வித்யையை கொண்டவளும், மரகதப்ரபா நீலா லீலா – மரகதபச்சைப்போல் கறுத்த நிலையாயிருப்பவளும், பரவசித- ஸ்வாதீனப்படுத்தப்பட்ட, சூலாயுத மனு: - சூலபாணி மனதையுடையவளும, சரணநத-தனது திருவடிகளில் வணங்கிய, பௌரந்தரபூரீம்ருகாக்ஷீ – புரந்தரனை இந்திரனுடைய லோகத்திலுள்ள ஸ்திரீகளையுடையவளும், கமலதரளாக்ஷீ – தாமரைபோல் அழகிய கண்ணுள்ளவளுமான காமாக்ஷீயானவள், மே - என்னுடைய, தம: பூரம் - பாபக்குவியலை, தூரம் நயது – தூரீகரணம் செய்யட்டும்.

உத்கிருஷ்ட ஸ்ரீ வித்யாஸ்வருபிணியும், காமவித்யாச்ரிதையும், பரமசிவமனஸ்ஸை வசப்படுத்தியவளும், தேவ ஸ்திரிகளால் நமஸ்கரிக்கப்பட்ட திருவடியை உடையவளுமான காமாக்ஷீ தேவி எனது பாபஸமூஹத்தைத் துறத்தியடிக்கட்டும்.

अहंताख्या मत्कं कबलयति हा हन्त हरिणी
हठात्संविद्रूपं हरमहिषि सस्याङ्कुरमसौ ।
कटाक्षव्याक्षेपप्रकटहरिपाषाणपटलै-
रिमामुच्चैरुच्चाटय झटिति कामाक्षि कृपया ॥ ५७ ॥

அஹந்தாக்யா மத்கம் கபளயதி ஹா ஹந்த ஹரிணீ
ஹடாத் ஸம்வித்ருபம் ஹரமஹிஷி ஸஸ்யாங் குரமஸௌ |
கடாக்ஷ வ்யாக்ஷேப ப்ரகட ஹரிபாஷாண படலை!
இமாம் உச்சைருச்சாடய ஜடிதி காமாக்ஷி க்ருபயா || [57]

காமாக்ஷியே! ஹரமஹிஷி ! – பரமசிவ பத்நியே ! அஹந்தாக்யா – அஹம்பாவமென்ற, ஹரிணீ – பெண்மான், மத்கம் – என்னுடையதான, ஸம்வித்ருபம்–ஸம்வித்ருபமான (ஞானருபமான), ஸஸ்யாங்குரம் – பயிர் முளையை, ஹடாத்–பலாத்காரமாக, கபளயதி – விழுங்குகிறது. ஹா - ஹந்த, கஷ்டம்!

கஷ்டம்! 'இமாம் - இந்த பெண்மானை, கடாக்ஷவ்யாக்ஷேப - உனது கடாக்ஷ பாதமாகிற, ப்ரகட ஹரிபாஷாண படலை: - வெளிப்படையான இந்திர நீலக்கற்களின் ஸமூஹத்தால், க்ருபயா - தயையுடன், ஜடிதி - சீக்கிரமே, உச்சை: - வெகு தூரம், உச்சாடய - துரத்துவாயாக.

என்னுடைய அஹம்பாவமாகிற பெண்மான் ஸம்வித் என்ற பயிரைக் கடித்து விழுங்குகிறது, ஆகையால், காமாக்ஷியே! தயை செய்து உனது கடாக்ஷமாகிற இந்திர நீலகற்களின் வீச்சால் அந்த மானை வெகுதூரம்'துரத்திவிடுவாயாக.

बुधे वा मूके वा तव पतति यस्मिन्क्षणमसौ
कटाक्षः कामाक्षि प्रकटजडिमक्षोदपटिमा ।
कथंकारं नास्मै करमुकुलचूडालमुकुटा
नमोवाकं ब्रूयुर्नमुचिपरिपन्थिप्रभृतयः ॥ ५८ ॥

புதே வா முகே வா தவ பததி யஸ்மின் க்ஷண மஸௌ
கடாக்ஷ: காமாக்ஷி! ப்ரகட ஜடிமக்ஷோத படிமா |
கதம் காரம் நாஸ்மை கரமுகுள சூடால முகுடா
நமோவாகம் ப்ருயு: நமுசி பரிபந்திப்ரப்ருதய: II [58]

காமாக்ஷியே! ப்ரகட ஜடிமக்ஷோத படிமா- பலமான அஞ்ஞானத்தை அழிப்பதில் ஸாமார்த்தியமுள்ள, தவ - உன்னுடைய, அஸௌ கடாக்ஷ: - இந்த கடாக்ஷமானது, க்ஷணம் - ஒரு க்ஷணமாவது, யஸ்மின் - எந்த, புதே வா - வித்வானிடமோ, முகே வா - ஊமையிடமோ, பததி - விழுமேயானல், அஸ்மை-அந்த மனிதன் பொருட்டு, நமுசி பரிபந்தி ப்ரப்ருதய: - நமுசி சத்ருவான இந்திரன் முதலிய தேவர்கள், கர முகுள சூடால முகுடா: - கை அஞ்ஜலியை சிரஸ்ஸில் கிரீடமாகக் கொண்டவர்களாக, நமோவாகம் - நமஸ்கார உக்தியை, கதம் காரம் - எப்படித்தான், ந ப்ருயு: - சொல்லாமலிருப்பார்கள் ?

காமாக்ஷி தேவியின் கடாக்ஷமானது வித்வானே, மூகனே எவன் பேரில் விழுந்தாலும், அந்த உத்தம பக்தனுக்கு இந்த்ராதி தேவர்களும் சிரஸ்மேல் கைகூப்பி நமஸ்கார உக்திகள் சொல்லாமலிருக்க முடியுமா ? அவச்யம் சொல்லுவார்கள்.

प्रतीचीं पश्याम: प्रकटरुचिनीवारकणिका-
प्रभासध्रीचीनां प्रदलितषडाधारकमलाम् ।
चरन्तीं सौषुम्णे पथि परपदेन्दुप्रविगल-
त्सुधार्द्रां कामाक्षीं परिणतपरज्योतिरुदयाम् ॥ ५९ ॥

ப்ரதீசீம் பஶ்யாம: ப்ரகடருசி நீவார கணிகா ப்ரபா
ஸத்ரீசீநாம் ப்ரதளித ஷடாதார கமலாம் |
சரந்தீம் ஸௌஷும்நே பதி பரபதேந்து ப்ரவிகளத்
ஸுதார்த்ராம் காமாக்ஷீம் பரிணத பரம்ஜ்யோதிருதயாம் ll 59

ப்ரகடருசி நீவார கணிகாப்ரபாஸத்ரீசீநும் - அதிக காந்தியுள்ள நீவார தான்யத்தின் கணங்களுக்கு ஸமமான காந்தியுள்ளவளும், ப்ரதளித ஷடாதார கமலாம் – மலரச் செய்த ஆறு ஆதார சக்ரங்களான பத்மங்களை உடையவளும், ப்ரதீசீம் – உயர்நோக்கியுள்ளவளும், ஸௌஷும்நே பதி - ஸுஷும்மா என்ற மார்க்கத்தில், சரந்தீம் – நடப்பவளாயும், பரபத – உயர்ந்த ஸ்தானமாகிற சிரஸி லுள்ள, இந்து ப்ரவிகளத் ஸுதார்த்ராம் – சந்திரனிட மிருந்து பெருகுகிற அமிருதத்தால் நனைந்தவளாயுமிருக்கிற காமாக்ஷியை, பரிணத பரஞ்ஜ்யோதிருதயாம் - பக்குவமான பரஞ்ஜோதிஸின் அவதாரமாக, பஶ்யாம:–அறிந்தோம்.

உயர்ந்த காந்தியுள்ள நீவாரத்தின் சோபையுள்ளவளும், ஷடாதார கமலத்தை மலரச்செய்கிறவளும், ஸௌஷும்ந மார்க்கத்தில் ஸஞ்சரிப்பவளாயும், சிரஸிலுள்ள சந்திர பிம்பத்திலிருந்து பெருகுகிற அமிர்தத்தால் நனைந்தவளுமான ஸ்ரீ காமாக்ஷியை பரம்ஜோதிஸ் உதயமாகக் காண்கிறோம்.

जम्भारातिप्रभृतिमुकुटी: पादयो: पीठयन्ती
गुम्फान्वाचां बुधजनकृतान्स्वैरमारामयन्ती ।
शम्पालक्ष्मीं मणिगणरुचापाटलां प्रापयन्ती
कम्पातीरे कविपरिषदां जृम्भते भाग्यसीमा ॥ ६० ॥

ஜம்பாராதி ப்ரப்ருதி முகுட: பாதயோ: பீடயந்தீ
கும்பாந் வாசாம் புதஜன க்ருதாந் ஸ்வைர மாராமயந்தீ |
ஶம்பா லக்ஷ்மீம் மணிகண ருசா பாதபான் ப்ராபயந்தீ
கம்பாதீரே கவி பரிஷதாம் ஜ்ரும்பதே பாக்யஸீமா ll [60]

ஜம்பாராதி ப்ரப்ருதி முகுட: - ஜம்பாஸுர சத்ருவான இந்திரன் முதலிய தேவர்களின் க்ரீடங்களை, பாதயோ: - தனது திருவடிக்கு, பீடயந்தி - பீடமாகச் செய்கிறவர்களும், புதஜன க்ருதான் - வித்வான்களால் செய்யப்பட்ட, வாசரம் கும்பான் - கவிதா வாக்குகளை, ஸ்வைரம் - இச்சைப்படி, ஆராமயந்தி - உத்யான வனம்போல் உல்லாசார்த்தமாக உபயோகிப்பவளும், மணிகணருசா - தனது ஆபரண ஸமூஹக் காந்தியால், பாதபான் - விருக்ஷங்களையும், சம்பா லக்ஷ்மீம் - மின்னல் போன்ற சோபையை, ப்ராபயந்திம் - அடையச்செய்கிறவளாயும், கவி பரிஷதாம் - கவி ஸமூஹத்தின், பாக்யஸீமா - பாக்ய எல்லையாகிற காமாக்ஷிதேவி, கம்பாதீரே - கம்பா நதிக்கரையில், ஜ்ரும்பதே - ஓங்கி விளங்குகிறாள்.

இந்திராதி தேவர்களுடைய சிரஸ் க்ரீடங்களை தனது சரணங்களுக்கு பீடமாகச் செய்கிறவளும், கவிகளுடைய வாக்கு ரசரஸத்தை உத்யானம்போல் அநுபவிப்பவளும், தனது ஆபரண காந்தியால் விருக்ஷங்களைக்கூட மின்னல் சோபையுள்ளதாகச் செய்கிறவளுமாக காமாக்ஷி தேவி கவிகளின் பாக்யமாக கம்பாதீரத்தில் பிரகாசிக்கிறாள்.

चन्द्रापीडां चतुरवदनां चञ्चलापाङ्गलीलां
कुन्दस्मेरां कुचभरनतां कुन्तलोद्धूतभृङ्गाम् ।
मारारातेर्मदनशिखिनं मांसलं दीपयन्तीं
कामाक्षीं तां कविकुलगिरां कल्पवल्लीमुपासे ॥ ६१ ॥

சந்த்ராபீடாம் சதுரவதனாம் சஞ்சலாபாங்கலீலாம்
குந்தஸ்மேராம் குசபரநதாம் குந்தலோத்தூத ப்ருங்காம் |
மாராராதே: மதனசிகினம் மாம்ஸலம் தீபயந்தீம்
காமாக்ஷீம் தாம் கவிகுல கிராம் கல்பவல்லீமுபாஸே || [61]

சந்த்ராபீடம் - சந்திரனை சிரோ பூஷணமாகக்கொண்டவளும், சதுரவதனன் - அழகிய முகமுள்ளவளும், சஞ்சலா பாங்க லீலாம் - சஞ்சலமான கடாக்ஷப்பார்வை லீலையுள்ளவளும், குந்தஸ்மேராம் - ஆம்பல் போன்ற புன் சிரிப்புள்ளவளும், குசபாநதாம் - ஸ்தனபாரத்தால் வணங்கியவளும், குந்தலோத்தூத ப்ருங்காம் - கேச சோபையால் தூரத்தப்

பட்ட வண்டுகளையுடையவளும், மாராராதே: - மன்மத சத்ருவான சிவனுக்கும், மதனசிகினம் - மன்மத அக்னியை, மாம்ஸளம் – அதிகமாக, தீபயந்தீம் - விருத்தி செய்கிறவளாயும், கவிகுல கிராம் - கவி ஸமூஹ வாக்குகளுக்கு, கல்பவல்லீம் - கல்பகக்கொடி போன்றவளுமான, தாம் - அந்த, காமாக்ஷீம் – காமாக்ஷிதேவியை, உபாஸே - உபாஸிக்கிறேன்.

சந்திரனை ஆபரணமாகக்கொண்டவளும் அழகிய முக சோபையுள்ளவளும், கேச சோபையால், வண்டினங்களை தோற்கடித்தவளும், மன்மதனைக் கொளுத்திய பரமசிவனுக்கும் மன்மதாக்னியை விருத்தி செய்கிறவளும், கவி ஸமூஹ வாக்குகளுக்கு கல்பகக்கொடிபோல் இருப்பவளுமான ஸ்ரீ காமாக்ஷி தேவியை உபாஸிக்கிறேன்.

कालाम्भोदप्रकरसुषमां कान्तिभिस्तर्जयन्ती
कल्याणानामुदयसरणिः कल्पवल्ली कवीनाम् ।
कंदर्पारेः प्रियसहचरी कल्मषाणां निहन्त्री
काञ्चीदेशं तिलकयति सा कापि कारुण्यसीमा ॥ ६२ ॥

காலாம்போத ப்ரகர ஸுஷமாம் காந்திபிஸ் தர்ஜயந்தீ
கல்யாணாநாமுதய ஸரணி: கல்பவல்லீ கவீநாம் |
கந்தர்ப்பாரே: பிரிய ஸஹசரீ கல்மஷாணாம் நிஹந்த்ரீ
காஞ்சீதேசம் திலகயதி ஸா காபி காருண்யஸீமா ll [62]

காலாம்போத ப்ரகர ஸுஷமாம் - கருத்த மேக ஸமூஹத்தின் அழகை, காந்திபி: – தனது காந்தியால், தர்ஜயந்தி - திரஸ்கரிக்கிறவளும், கல்யாணநாம் - மங்களங்களுக்கு, உதய ஸரணி: - உத்பத்தி மார்க்கமாயும், கவீநாம் – கவிகளுக்கு, கல்பவல்லீ - கல்பகவிருக்ஷக் கொடியாயும், கந்தர்ப்பாரே: – மன்மத சத்ருவான பரமசிவனுக்கு, பிரியஸஹசரீ – பிரியபத்நியாயும், கல்மஷாணாம் - பாபங்களுக்கு, நிஹந்த்ரீ - நாசகாரிணியாயும், காருண்ய ஸீமா – கருணைக்கு எல்லையிடமாயுள்ள, காபி - ஒருவள், (காமாக்ஷி) காஞ்சீதேசம் – காஞ்சீ பிரதேசத்தை, திலகயதி - திலகம்போல் அலங்கரிக்கிறாள்.

காஞ்சியில் விளங்குகிறாள்.

தனது நீலமேக காந்தியால் கருமேகங்களையும் கீழ்ப் படுத்துகிறவளும், ஸகல க்ஷேமங்களுக்கும் உத்பத்தி ஸ்தான மாயும், கவிகளின் கற்பக விருக்ஷமாயும், ஸகல பாபங்களை யும் போக்குகிறவளுமான, மன்மத சத்ருவான பரமசிவன் பத்நியான காமாக்ஷிதேவி கருணையின் எல்லையிடமாக கிருள்.

ऊरीकुर्वन्नुरसिजतटे चातुरीं भूधराणां
पाथोजानां नयनयुगले पारिपन्थ्यं वितन्वन् ।
कम्पातीरे विहरति रुचा मोघयन्मेघशैलीं
कोकद्वेषं शिरसि कलयन्कोऽपि विद्याविशेषः ॥ ६३ ॥

ஊரீகுர்வன் உரஸிஜதடே சாதுரீம் பூதராணும்
பாதோஜாநாம் நயன யுகளே பாரி பந்த்யம் விதன்வன் |
கம்பாதீரே விஹரதி ருசா மோகயன் மேக ஶைலீம்
கோகத்வேஷம் சிரஸி கலயன் கோபி வித்யா விசேஷ:|| [63]

உரஸிஜதடே – ஸ்தனப்ரதேசத்தில், பூதராணும் - மலை களுடைய, சாதுரீம் – மாதிரியை, ஊரீகுர்வன் – அமைத்துக் கொண்டதும், நயனயுகளே – இருகண்களிலும், பாதோஜா நாம்–தாமரைப்பூக்களுடைய, பாரிபந்த்யம் – சத்ருத் தன்மை யை, விதன்வன் – செய்துகொண்டும், மேகஶைலீம்–மேககூட் டத்தை, மோகயன் - காந்தியால் வீணக்குகிறதும், சிரஸி - தலையில், கோகத்வேஷம் - சக்ரவாக பக்ஷியின் எதிர்ப்பை, கலயன் - வஹிப்பதுமான, கோபி – ஒரு, வித்யா விசேஷ: - வித்யா ஸ்வரூப விசேஷமானது (காமாக்ஷி), கம்பாதீரே – கம்பைக்கரையில், ருசா - தனது சரீர காந்தியால், விஹரதி - விளையாடுகிருள்.

கம்பாதீரத்தில் காமாக்ஷிதேவி ஓர் அதிசய வித்யா ஸ்வ ரூபமாக விளங்குகிருள். மார்பில் பர்வதங்களின் (ஸ்தனங் கள்) சோபையை தாங்குகிருள். கண்களில் தாமரை புஷ்பத் தின் எதிரித்தன்மையையும் சிரஸில் சக்கிரவாக பக்ஷியின் த்வேஷத்தையும் தாங்கி நீலமேகங்களையும் காந்தியால் ஜயித்து விளங்குகிருள்.

काञ्चीलीलापरिचयवती कापि तापिञ्छलक्ष्मी-

जाड्यारण्ये हुतवहशिखा जन्मभूमिः कृपायाः ।

माकन्दश्रीर्मधुरकविताचातुरी कोकिलानां

मार्गे भूयान्मम नयनयोर्मान्मथी कापि विद्या ॥ ६४ ॥

காஞ்சீலீலா பரிசயவதீ காபி தாபிஞ்ச லக்ஷ்மீ:
ஜாட்யாரண்யே ஹுதவஹசிகா ஜன்மபூமி: க்ருபாயா: |
மாகந்தஸ்ரீ: மதுர கவிதா சாதுரீ கோகிலாநாம்
மார்க்கேபூயான் மம நயநயோ: மான்மதீ காபி வித்யா ॥ [64]

காஞ்சீலீலா பரிசயவதீ – காஞ்சீபுரத்தில் விளையாடுவதில் ஊக்கமுள்ளவளும், காபி தாபிஞ்ச லக்ஷ்மீ: – இணையற்ற காசாம்பூ சோலையுள்ளவளும், ஜாட்யாரண்யே – அக்ஞானமாகிற காட்டில், ஹுதவஹசிகா – காட்டுத்தீயின் சிகை போன்றவளும், கிருபாயா: – தயைக்கு, ஜன்மபூமி: – உத்பத்தி ஸ்தானமாயும், மதுர கவிதா சாதுரீ கோகிலாநாம் –இனிமையான கவிதா சாதுர்யமாகிற குயில்களுக்கு, மாகந்த ஸ்ரீ: – மாந்துளிர் சோலை போன்றவளுமான, காபி – ஒரு, மான்மதீ – மன்மத ஸம்பந்தமுள்ள, வித்யா – வித்யையான, (காமாக்ஷி) மம – என்னுடைய, நயனயோ: – கண்களின், மார்க்கே – வழியில், பூயாத – தோன்றவேணும்.

காசாம்பூவின் தேஜஸ்ஸை உடையவளும், அக்ஞானமாகிற காட்டிற்கு காட்டுத் தீ போன்றவளும், தயையின் உத்பத்தி ஸ்தானமாயும், கவிதையாகிற குயிலுக்கு மாந்துளிர் போன்றவளுமான மன்மத வித்யா ஸ்வரூபிணியான காமாக்ஷி தேவீ எனது கண்களில் தோன்றவேண்டும்.

सेतुर्मातर्मरकतमयो भक्तिभाजां भवाब्धौ

लीलालोला कुवलयमयी मान्मथी वैजयन्ती ।

काञ्चीभूषा पशुपतिदृशां कापि कालाञ्जनाली

मत्कं दुःखं शिथिलयतु ते मञ्जुलापाङ्गमाला ॥ ६५ ॥

ஸேதுர்மாத: மரகதமயோ பக்திபாஜாம் பவாப்தௌ
லீலா லோலா குவலய மயீ மான்மதீ வைஜயந்தீ |
காஞ்சீபூஷா பசுபதித்ருஶாம் காபி காளாஞ்ஜனாளீ
மத்கம் துக்கம் ஶிதிலயது தே மஞ்ஜுளா பாங்கமாலா ॥ [65]

மாத:!-தாயே!, பக்திபாஜாம்-உன்னிடம் பக்தி செய்தவர்களுக்கு, பவாப்தௌ – ஸம்ஸார ஸாகரத்தில், மரகதமய: – மரகத கற்களால் ஏற்பட்ட, ஸேது: – பாலமாயும், லீலாலோலா – உல்லாஸத்தால் சஞ்சலமாயும், குவலயமயீ – குவலய புஷ்பரூபமான, மான்மதீ – மன்மதனுடைய, வைஜயந்தீ-ஜெயக்கொடி போன்றதும், காஞ்சீ பூஷா – காஞ்சீநகரத்தை அலங்கரிப்பதும், பசுபதித்ருமாம் – பசுபதியான பரமசிவனுடைய கண்களுக்கு, காபி – ஒரு, காளாஞ்சனீ – கருப்பு மைக்குச்சியாயுமிருக்கிற, தே – உன்னுடைய, மஞ்சுளா – அழகிய, அபாங்கமாலா – கடைக்கண் பார்வை மாலையானது, மத்கம் – என்னுடையதான, துக்கம் – துக்கத்தை, சிதிலயது – போக்கடிக்கட்டும்.

தாயே! உனது அழகிய கடாக்ஷ மாலையானது ஸம்ஸார ஸமுத்திரத்தின் பாலம் போன்றதாயும் மன்மதனின் ஜெயக்கொடியாயும், பரமசிவனின் கண்களுக்கு கருப்பு மையிடும் சலாகைபோலுமுள்ளது. அது எனது துக்கத்தை நீக்கட்டும்.

व्यावृण्वाना: कुवलयदलप्रक्रियावैरमुद्रां
व्याकुर्वाणा मनसिजमहाराजसाम्राज्यलक्ष्मीम् ।
काञ्चीलीलाविहृतिरसिके काङ्क्षितं न: क्रियासु-
र्बन्धच्छेदे तव नियमिनां बद्धदीक्षा: कटाक्षा: ॥ ६६ ॥

வ்யாவ்ருண்வாளு: குவலய தளப்ரக்ரியா வைரமுத்ராம்
வ்யாகுர்வாளு மனஸிஜ மஹாராஜ ஸாம்ராஜ்ய லக்ஷ்மீம் |
காஞ்சீ லீலா விஹ்ருதி ரஸிகே காங்க்ஷிதம் ந: க்ரியாஸு:
பந்தச்சேதே தவ நியமிநாம் பத்ததீக்ஷா: கடாக்ஷா: ।। [66]

காஞ்சீலீலா விஹ்ருதி ரஸிகே! – காஞ்சியில் லீலா ஸஞ்சார ரஸிகையான தேவியே!, குவலயதளப்ரக்ரியா வைரமுத்ராம் – குவலய புஷ்பத்தில் நடவடிக்கையில் சத்ருத் தன்மையை, வ்யாவ்ருண்வாளு: – விவரிக்கின்றவையும், மனஸிஜ மஹாராஜ ஸாம்ராஜ்ய லக்ஷ்மீம் – மன்மத மஹா ராஜனுடைய ஸாம்ராஜ்யமாகிற சோபையை, வ்யாகுர்வாளு: – விஸ்தரிப்பவைகளும், நியமினும் – யோகிகளுடைய, பந்தச்சேதே – பந்தத்தை அறுப்பதில், பத்ததீக்ஷா: – தீக்ஷை

பெற்றவையுமான, தவ-உன்னுடைய, கடாக்ஷா: - கடாக்ஷங்கள், ந: - எங்களுடைய, காங்க்ஷிதம் - அபீஷ்டத்தை, கிரியாஸு: - செய்யட்டும்.

காஞ்சீயில் லீலா ஸஞ்சார ரஸிகையான காமாக்ஷியே! மேலும் உனது கடாக்ஷங்கள் குவலய புஷ்ப இதழ்களுடன் வைரமுள்ளவையாயும், மன்மத மஹாராஜனின் ஸாம்ராஜ்ய லக்ஷ்மியாயும் பக்தர்களின் ஸம்ஸார பந்தத்தை சேதிப்பதாயுமிருக்கின்றன. அவை எனது அபீஷ்டங்களை கொடுக்கட்டும்.

कालाम्भोदे सितरुचि दलं कैतकं दर्शयन्ती
मध्येसौदामिनि मधुलिहां मालिकां राजयन्ती ।
हंसारावं विकचकमले मञ्जुमुल्लासयन्ती
कम्पातीरे विलसति नवा कापि कारुण्यलक्ष्मीः ॥ ६७ ॥

காளாம்போதே ஸிதருசி தளம் கைதகம் தர்சயந்தீ
மத்யே ஸௌதாமினி மதுலிஹாம் மாலிகாம் ராஜயந்தீ |
ஹம்ஸாராவம் விகசகமலே மஞ்ஜு முல்லாஸயந்தீ
கம்பாதீரே விலஸதி நவா காபி காருண்ய லக்ஷ்மீ: ll [67]

காளாம்போதே – கருத்தமேகத்தில், (கேசத்தில்) ஸிதருசி – வெளுத்த காந்தியுள்ள, கைதகம் - தாழம்பூவின், தளம் – மடலை, தர்சயந்தீ – காட்டுகிறவளும், (சந்திர கலை) மத்யே ஸௌதாமினி - மின்னல் கொடியின் மத்தியில், (சரீர மத்தியில்) மதுலிஹாம் மாலிகாம் – வண்டுகளின் வரிசையை (ரோமராஜியை) ராஜயந்தீ - விளங்கச் செய்கிறவளும், விகசகமலே – மலர்ந்த தாமரைப்பூவில் (பாதத்தில்) மஞ்ஜு – இனிமையான, ஹம்ஸாராவம் – ஹம்ஸத்வனியை (சலங்கைகளின் சப்தத்தை) உல்லாஸயந்தீ – ஆனந்திக்கச் செய்கிறவளுமான ஒரு உயர்ந்த, காருண்யலக்ஷ்மீ: - காருண்ய லக்ஷ்மீயானது, கம்பாதீரே விலஸதி – கம்பாதீரத்தில் விளங்குகிறது.

கம்பாதீரத்தில் விளங்குகிற கருணாமூர்த்தியான காமாக்ஷியாகிய காருண்ய லக்ஷ்மீயானவள் விலக்ஷணமான சோபையுடன் விளங்குகிறாள். கூந்தலில் வைக்கப்பட்ட தாழம்பூ

மடல் போல் தேவியில் கேசத்திலுள்ள சந்திர கலையாக விளங்குகிறது. சரீரமாகிற மின்னல் கொடியின் மத்தியில் வண்டு ஸமூஹம்போல் பிரகாசிக்கிற ரோமராஜியுடன் சோபிக்கிருள். மலர்ந்த தாமரைப்பூ போலிருக்கிற திருவடிகளில் சலங்கைகள் மூலமாக ஹம்ஸத்வனியை உண்டாக்குகிருள். இத்தகைய தேவி கம்பா நதி தீரத்தில் விளங்குகிருள்.

चित्रं चित्रं निजमृदुतया भर्त्सयन्पल्लवाली
पुंसां कामान्भुवि च नियतं पूरयन्पुण्यभाजाम् ।
जातः शैलान्न तु जलनिधेः स्वैरसंचारशीलः
काञ्चीभूषा कलयतु शिवं कोऽपि चिन्तामणिर्मे ॥ ६८ ॥

சித்ரம் சித்ரம் நிஜம்ருதுதயா பர்த்ஸயன் பல்லவாளீம்
பும்ஸாம் காமான் புவி ச நியதம் பூரயன் புண்ய பாஜாம் |
ஜாத: சைலாந்ந து ஜலநிதே: ஸ்வைர ஸஞ்சாரஶீல:
காஞ்சீபூஷா கலயது ஶிவம் கோபி சிந்தாமணிர்மே ll [68]

நிஜம்ருதுதயா – தனது மிருதுத்தன்மையால், பல்லவாளீம் - தளிர் ஸமூஹத்தை, பர்த்ஸயன்–திரஸ்கரிக்கிறதும், புவி:–பூமியிலுள்ள, புண்யபாஜாம் - புண்யத்தைப்பெற்ற, பும்ஸாம் – மனிதர்களுக்கு, காமாந் – அபீஷ்டங்களை, பூரயந் – பூர்த்தி செய்கிறதும், ஸ்வைர ஸஞ்சார ஶீல: – ஸ்வச்சந்தமாக ஸஞ்சரிப்பதும், ந து ஜலநிதே: - ஸமுத்திரத்திலில்லாமல், ஶைலாத்-மலையிலிருந்து, ஜாத:–உண்டானதும், சித்ரம் சித்ரம் – மிக அதிசமான, காஞ்சீபூஷா - காஞ்சீபுர அலங்காரமானதுமான, கோபி–ஒரு, சிந்தாமணி: - சிந்தாமணியானது (காமாக்ஷி) மே – எனக்கு, ஶிவம் – மங்களத்தை, கலயது – செய்யட்டும். கவி இதில் காமாக்ஷியை ஓர் அதிசய சிந்தாமணியாகவர்ணிக்கிருர்.

காமாக்ஷியாகிற சிந்தாமணியானது ஸமுத்திரத்திலிருந்து உண்டானதில்லை. ஆனுல் மலையிலிருந்து, அதாவது ஹிமவானிடமிருந்து உண்டாகியது. இந்த சிந்தாமணி கல்லாயிருந்தும் தனது மிருதுத்தன்மையால் தளிர்களையும் ஜயிக்கிறது. இது ஆச்சர்யம்! இவ்வாறு அதிசயமான சிந்தாமணியானது புண்யசாலிகளின் இஷ்டத்தை பூர்த்திசெய்து

கொண்டு காஞ்சிக்கு (ஒட்டியாணத்திற்கு) அலங்காரமாக விளங்குகிறது. அது எனக்கு மங்களத்தை கொடுக்க வேணும்.

> ताम्राम्भोजं जलदनिकटे तत्र बन्धूकपुष्पं
> तस्मिन्मल्लीकुसुमसुषमां तत्र वीणानिनादम् ।
> व्यावृण्वाना सुकृतलहरी कापि काञ्चीनगर्या-
> मैशानी सा कलयतितरामैन्द्रजालं विलासम् ॥ ६९ ॥

> தாம்ராம் போஜம் ஜலதநிகடே தத்ர பந்தூக புஷ்பம்
> தஸ்மின் மல்லீ குஸுமஸுஷமாம் தத்ர வீணா நிநாதம் |
> வ்யாவ்ருண்வாநா ஸுக்ருதலஹரீ காபி காஞ்சீ நகர்யாம்
> ஐசாநீ ஸா கலயதிதராம் ஐந்த்ர ஜாலம் விலாஸம் || [69]

ஜலத நிகடே - மேகத்தின் (கூந்தலின்) ஸமீபத்தில், தாம்ராம்போஜம் - செந்தாமரைப்பூவையும் (முகத்தையும்), தத்ர - அந்த செந்தாமரையில் (முகத்தில்), பந்தூகபுஷ்பம் - செம்பரத்தம்பூவை (உதடு) யும், தஸ்மின் - அந்த செம்பரத்தைப் பூவின் இடையில், மல்லீ குஸும ஸுஷமாம் - மல்லிகைப்பூவின் (பற்களின்) சோபையையும், தத்ர - அதில் வீணாநிநாதம் - வீணையின் த்வனியையும், (இனிய குரல்), வ்யாவ்ருண்வாநா - விளக்கிக்காட்டுகிறவளும், ஐசாநீ - ஈசானன் ஸம்பந்தமுள்ளவளுமான, காபி - ஒரு, ஸுக்ருத லஹரீ-புண்ய பரம்பரையானது (காமாக்ஷி), காஞ்சீ நகரயாம் - காஞ்சீ பட்டிணத்தில், ஐந்த்ரஜாலம் - இந்திரஜால ஸம்பந்தமான, விலாஸம் - விளையாட்டை, கலயதி - செய்கிறாள்.

காமாக்ஷிதேவியானவள் காஞ்சீ நகரத்தில் ஈசான ஸம்பந்தம் பெற்ற இந்திரஜால விலாஸம் செய்கிறவள்போல் காணப்படுகிறாள். மேகத்தின் ஸமீபத்தில் ஒரு செந்தாமரைப் பூ; அதில் ஒரு செம்பரத்தம்பூ; அதில் மல்லிகைப் புஷ்பம்; அதில் இனிய வீணா சப்தம். இது ஒரு இந்திரஜால லீலை போலிருக்கிறது. மேகம்போன்ற கருத்த கேச பாசத்தின்கீழ் முகமாகிற செந்தாமரைப்பூ. அதில் செம்பரத்தம்பூ போன்ற உதடு. அதில் பற்களாகிற மல்லிகை புஷ்பம். அதில் இனிய குரலாகிற வீணா சப்தம், இத்யாதிகள் ஜாலவித்தை போன்றிருக்கின்றன.

आहारांशं त्रिदशसदसामाश्रये चातकाना-
माकाशोपर्यपि च कलयन्नालयद्वन्द्वमेषाम् ।
कम्पातीरे विहरति तरां कामधेनुः कवीनां
मन्दस्मेरो मदननिगमप्रक्रियासंप्रदायः ॥ ७० ॥

ஆஹாராம்ஶம் த்ரிதச ஸதஸா மாஶ்ரயே சாதகாநாம்
ஆகாஶோபர்யபிச கலயன் ஆலயத்வந்த்வ மேஷாம் |
கம்பாதீரே விஹரதி தராம் காமதேனு: கவீநாம்
மந்தஸ்மேரோ மதன நிகம ப்ரக்ரியா ஸம்ப்ரதாய: || [70]

சாதகாநாம் -- சாதக பக்ஷிகளுக்கு, ஆச்ரயே - ஆச்ரயமான மேகம்போன்ற கேச பாசத்தில், த்ரிதச ஸதஸாம் - தேவ ஸமூஹத்தினுடைய, ஆஹாராம்சம் - ஆஹாரமாகிற சந்திர கலையை தரிப்பவளும், ஆகாசோபரி - ஆகாசம்போல் கண்ணுக்கும்புலப்படாத இடுப்புக்குமேல், ஏஷாம் - இந்த தேவர்களுக்கு, ஆலயத்வந்த்வம் - இரண்டு ஆலயங்களையும் (ஸ்தனங்களையும்), கலயன் - வஹித்துக்கொண்டு இருப்பவளும், கவீநாம் - கவிகளுக்கு, காமதேனு: - காமதேனு போன்றவளும், மந்தஸ்மேர: - மிருதுவான புன்சிரிப்புடன் கூடியவளும், மதனநிகமப்ரக்ரியா ஸம்ப்ரதாய: - மன்மத வேதமுறை ஸம்ப்ரதாயம் போன்றவளுமான காமாக்ஷிதேவி, கம்பாதீரே - கம்பாநதிக்கரையில், விஹாரதி தராம் - நன்கு விளையாடுகிறாள்.

கவிகளுக்கு காமதேனுபோன்றவளும், மன்மத வேத முறை ஸம்ப்ரதாயம்போல் இருப்பவளும், தேவர்களின் ஆஹாரமான சந்திர கலையை மேகம்போன்ற கேச பாசத்தில் தரிப்பவளும், ஆகாசம்போல் ஸூக்ஷ்மமான இடுப்புக்கு மேல் இரண்டு தேவாலயங்களை (ஸ்தனங்களை) வஹிப்பவளுமான காமாக்ஷீ கம்பாநதீ தீரத்தில் விளையாடிக்கொண்டிருக்கிறாள்.

आर्द्रीभूतैरविरलकृपैरात्तलीलाविलासै-
रास्यापूर्णैरधिकचपलैरञ्चिताम्भोजशिल्पैः ।
कान्तैर्लक्ष्मीललितभवनैः कान्तिकैवल्यसारैः
काश्मल्यं नः कबलयतु सा कामकोटीकटाक्षैः ॥ ७१ ॥

**ஆர்த்ரீபூதை: அவிரள க்ருபை: ஆத்த லீலா விலாஸை:**
**ஆஸ்தாபூர்ணை ரதிகசபலை ரஞ்சிதாம் போஜ ஶில்பை: ।**
**காந்தைர் லக்ஷ்மீ லலிதபவனை: காந்தி கைவல்யஸாரை:**
**காஶ்மல்யம் ந: கபளயது ஸா காமகோடீ கடாக்ஷை: ॥ [71]**

*ஸா* - அந்த, *காமகோடீ* - காமகோடியான காமாக்ஷியானவள், *ஆர்த்ரீபூதை:* - கருணாரஸத்தால் நனைந்தவையும், *அவிரள க்ருபை:* - இடைவிடாத தயையுள்ளவையும், *ஆத்த லீலா விலாஸை:* - லீலா விலாஸத்தோடு கூடியவையும், *ஆஸ்தா பூர்ணை:* - அநுக்ரஹம் நிறைந்தவைகளும், *அதிக சபலை:* - மிகவும் சஞ்சலங்களும், *அஞ்சித* - ஆச்ரயிக்கப்பட்ட, *அம்போஜ ஶில்பை:* - தாமரையின் சோபையை உடையவைகளும், *காந்தை:* - அழகுள்ளவையும், *லக்ஷ்மீ லலிதபவனை:* - லக்ஷ்மிக்கு அழகிய கிருஹம்போன்றவையும், *காந்தி கைவல்யஸாரை:* - காந்தியின் ஒரே வித ஸாரமானவையாயுமிருக்கிற, *கடாக்ஷை:* - தனது கடாக்ஷங்களால், *ந:* - நம்முடைய, *காச்மல்யம்* - அழுக்கை, *கபளயது* - போக்கட்டும்,

காமகோடியான ஸ்ரீ காமாக்ஷிதேவீ, கருணை மிகுந்தவையும், சஞ்சலங்களும், தாமரைக்கு ஸமமானவையும், லக்ஷ்மீ விலாஸக்ரஹம் போன்றவையுமான தனது கடாக்ஷங்களால் நமது பாபங்களை போக்கவேணும்,

आधून्वत्यै तरलनयनैराङ्गजीं वैजयन्ती-
मानन्दिन्यै निजपदजुषामात्तकाञ्चीपुरायै ।
आस्माकीनं हृदयमखिलैरागमानां प्रपञ्चै-
राराध्यायै स्पृहयतितरामादिमायै जनन्यै ॥ ७२ ॥

**ஆதூந்வத்யை தரள நயனை: ஆங்கஜீம் வைஜயந்தீம்**
**ஆனந்தின்யை நிஜபதஜுஷா மாத்த காஞ்சீபுராயை ।**
**ஆஸ்மாகீநம் ஹ்ருதயமகிலை ராகமாநாம் ப்ரபஞ்சை:**
**ஆராத்யாயை ஸ்ப்ருஹயதிதராம் ஆதிமாயை ஜனன்யை ॥ [72]**

*தரள நயனை:* - சஞ்சலமான நேத்ரங்களால், *ஆங்கஜீம்* - அங்கஜனான மன்மதனின், *வைஜயந்தீம்* - கௌரவத்தை, *ஆதூன்வத்யை* - அசைப்பவளும், *நிஜபதஜுஷாம்* - தனது

திருவடியை அடைந்தவர்களுக்கு, ஆனந்தின்யை – ஆனந் தத்தைக் கொடுப்பவளும், ஆத்த காஞ்சீபுராயை - காஞ்சீ புரத்தை அடைந்தவளும், அகிலை:– ஸகலமான, ஆகமா நாம் ப்ரபஞ்சை:– வேத ஸமூஹங்களாலும், ஆராத்யை – பூஜிக்கத் தக்கவளுமான, ஆதிமாயை ஜனந்யை – ஆதிமாதாவான காமாக்ஷிதேவியிடம், ஆஸ்மாகீநம் ஹ்ருதயம் – நமது ஹ்ரு தயமானது, ஸ்ப்ருஹயதிதராம் – மிகவும் ஆசையுள்ளதாய் இருக்கிறது.

ஸகல வேதங்களாலும் பூஜிக்கத்தக்கவளும், தனது சரணங்களையடைந்த பக்தர்களுக்கு ஆனந்தமென்கிற மோக்ஷத்தை அளிப்பவளுமான, உலகத்தின் ஆதிமாதாவான ஸ்ரீ காமாக்ஷியிடம் நமது மனம் ஆச்ரயித்து நிற்கிறது.

दूरं वाचां त्रिदशसदसां दुःखसिन्धोस्तरित्रं
मोहक्ष्वेलक्षितिरुहवने क्रूरधारासिपत्रम् ।
कम्पातीरे प्रणयि कविभिर्वर्णितोद्यच्चरित्रं
शान्त्यै सेवे सकलविपदां शांकरं तत्कलत्रम् ॥ ७३ ॥

தூரம் வாசாம் த்ரிதசஸதஸாம் துக்கஸிந்தோஸ்தரித்ரம்
மோஹக்ஷ்வேளக்ஷிதிருஹவனே க்ரூரதாராஸி பத்ரம் ।
கம்பாதீரேப்ரணயி கவிபிர் வர்ணிதோத்யத் சரித்திரம்
சாந்த்யை ஸேவே ஸகலவிபதாம் சாங்கரம் தத் களத்ரம் ॥ [73]

த்ரிதச ஸதஸாம் வாசாம் – தேவர்களுடைய வாக்காகிற வேதங்களுக்கும், தூரம் - எட்டாததும், துக்க ஸிந்தோ: – துக்கமாகிற நதிக்கு, தரித்ரம் – தாண்டும் ஓடமாயும், மோ ஹக்ஷ்வேளக்ஷிதிருஹவனே – அக்ஞானமாகிற விஷ வ்ருக்ஷத் தின் காட்டுக்கு, க்ரூரதாராஸிபத்ரம் - க்ரூரமான கூருள்ள கத்தியாயும், கம்பாதீரேப்ரணயி – கம்பை நதிக்கரை வாஸத் தில் ஆசையுள்ளதும், கவிபி: - கவிகளால், வர்ணிதோத்யத் சரித்ரம் - வர்ணிக்கப்பட்டுள்ள உயர்ந்த சரித்ரத்தையுடையது மான, தத் - அந்த, சாங்கரம் களத்ரம் – சங்கரனுடைய மனைவியுமான காமாக்ஷியை, ஸகல விபதாம் சாந்த்யை – எல்லாவித ஆபத்துக்களுடையவும் சாந்தியின்பொருட்டு, ஸேவே – ஸேவிக்கிறேன்.

வேத வாக்குகளின் எல்லைக்கும் எட்டாதவளும், அக்ஞானமான விஷ விருக்ஷத்திற்கு கத்திபோன்றவளுமான சங்கர தேவியான காமாக்ஷியை ஸகல ஆபத்துக்களும் நீங்க வேண்டி நமஸ்கரிக்கிறேன்.

खण्डीकृत्य प्रकृतिकुटिलं कल्मषं प्रातिभश्री-
शुण्डीरत्वं निजपदजुषां शून्यतन्द्रं दिशन्ती ।
तुण्डीराख्ये महति विषये स्वर्णवृष्टिप्रदात्री
चण्डी देवी कलयति रतिं चन्द्रचूडालचूली ॥ ७४ ॥

கண்டீக்ருத்ய ப்ரக்ருதி குடிலம் கல்மஷம் ப்ராதிபஸ்ரீ
ஶௌண்டீரத்வம் நிஜபதஜுஷாம் ஶூந்யதந்த்ரம் திஶந்தீ ।
துண்டீராக்யே மஹதி விஷயே ஸ்வர்ணவ்ருஷ்டி ப்ரதாத்ரீ
சண்டீதேவீ கலயதி ரதிம் சந்த்ர சூடால சூளீ ॥ [74]

நிஜபதஜுஷாம் - தனது திருவடியை அண்டியவர்களுக்கு, ப்ரக்ருதிகுடிலம் – ஸ்வபாவத்திலேயே குரூரமான, கல்மஷம் - பாபத்தை, கண்டீக்ருத்ய – போக்கடித்து, ப்ராதிபஸ்ரீ ஶௌண்டீரத்வம் - ஞானத்தோடு கூடிய ஸாமர்த்தியத்தை, ஶூன்யதந்த்ரம் – ஆலஸ்யமின்றி, திஶந்தீ - கொடுப்பவளும், துண்டீராக்யே – துண்டீரமென்கிற பெயருள்ள, மஹதி விஷயே - உயர்ந்த தேசத்தில், ஸ்வர்ண வ்ருஷ்டிப்ரதாத்ரீ – சுவர்ணமயமான மழையைக் கொடுத்துக்கொண்டிருப்பவளுமான, சண்டீதேவீ - சண்டீ என்ற பெயருள்ள தேவியான காமாக்ஷியானவள், சந்த்ர சூடாலசூளீ - சந்திரனாகிற சிரோபூஷணத்தை சிரஸ்ஸில் தரித்த பரமசிவனிடம், ரதிம் - ப்ரேமையை, கலயதி - செய்கிருள்.

தன்னுடைய திருவடிகளை அடைந்த பக்தர்களுடைய குடிலமயமான பாபங்களை நீக்கி நல்ல ஞானத்தைக் கொடுப்பவளும், துண்டீர மண்டலத்தில் ஸௌவர்ணவர்ஷம் செய்து தரித்ரத்தை நீக்குகிறவளுமான காமாக்ஷி, பரமசிவனின் சந்திரசூடனிடம் அளவற்ற ப்ரேமையைச்செலுத்தி விளங்கிக் கொண்டிருக்கிருள்.

येन ख्यातो भवति स गृही पूरुषो मेरुधन्वा
यद्दृक्कोणे मदननिगमप्राभवं बोभवीति ।
यत्प्रीत्यैव त्रिजगदधिपो जृम्भते किंपचानः
कम्पातीरे स जयति महान्कश्चिदोजो विशेषः ॥ ७५ ॥

யேந க்யாதோ பவதி ஸ க்ருஹீ பூருஷோ மேருதந்வா
யத் த்ருக்கோணே மதந நிகம ப்ராபவம் போபவீதி ।
யத்ப்ரீத்யைவ த்ரிஜகததிபோ ஜ்ரும்பதே கிம்பசாந:
கம்பாதீரே ஸ ஜயதி மஹாந் கச்சிதோஜோ விசேஷ: ॥ [75]

காமாக்ஷியிடுத தேஜஸ்ஸால், மேருதந்வா - மேரு மலையை வில்லாக உடைய, ஸ பூருஷ: - அந்த பரம புருஷனை ஈசன், க்யாத: - பிரஸித்தனை, க்ருஹீ - கிரஹஸ்தனுக, பவதி - விளங்குகிருனே, யத்த்ருக்கோணே - எந்த தேஜஸ்ஸின் கடைக்கண்களில், மதந நிகமப்ராபவம் - மன்மத வேதத்தின் கௌரவமானது, போபவீதி - வெளியாகிறதோ, யத்ப்ரீத்யைவ - எந்த தேஜஸ்ஸின் கிருபையாலேயே, கிம்பசாந: - தரித்ரன்கூட, த்ரிஜகததிப: - மூன்று லோக யஜமானனுக, ஜ்ரும்பதே - விருத்தியடைகிருனே, ஸ: - அத்தகைய, கஸ்சித் - ஒரு, ஒஜோவிசேஷ: - தேஜஸ் விசேஷமாகிற (காமாக்ஷி), கம்பாதீரே - கம்பைக் கரையில், மஹான் - பெரிதாக, ஜயதி - விளங்கிறது.

மரகனுமேருவை வில்லாகக்கொண்ட பரமசிவனின் பத்தியும், தங்கடாக்ஷ மஹிமையால் மன்மத சாஸ்திர மஹிமையை விளக்குகிறவளும், தனது க்ருபையால் தரித்திரனையும் மூன்று லோகாதிபதியாகச் செய்கிறவளுமான தேஜோமூர்த்தியான காமாக்ஷிதேவீ கம்பா தீரத்தில் விளங்குகிருன்:

धन्या धन्या गतिरिह गिरां देवि कामाक्षि यन्मे
निन्द्यां भिन्द्यात्सपदि जडतां कल्मषादुन्मिषन्तीम् ।
साध्वी माध्वीरसमधुरताभञ्जनी मञ्जुरीति-
र्वाणीवेणी झटिति वृणुतात्स्वर्धुनीस्पर्धिनी माम् ॥ ७६ ॥

**தன்யா தன்யா கதிரிஹ கிராம் தேவி! காமாக்ஷி! யந்மே**
**நிந்த்யாம் பிந்த்யாத் ஸபதி ஜடதாம் கல்மஷாதுந்மிஷந்தீம் ।**
**ஸாத்வீ மாத்வீரஸ மதுரதா பஞ்ஜநீ மஞ்ஜரீதி:**
**வாணீ வேணீ ஜடிதி வ்ருணுதாத் ஸ்வர்துநீ ஸ்பர்த்திநீ மாம் ॥ [76]**

தேவி காமாக்ஷியே! மே - எனக்கு, தன்யா தன்யா - மிகவும் மேலானதாயிருக்கிற, கிராம் - கவிதா வாக்குகளுடைய, கதி: - பிரவாஹமானது உண்டாகவேணும், யத் - ஏனென்றால், கல்மஷாத் - பாபத்திலிருந்து, உந்மிஷந்தீம் - உதிக்கிற, நிந்த்யாம் - நிந்திக்கத்தக்க, மே - என்னுடைய, ஜடதாம் - அக்ஞானத்தை, ஸபதி - சீக்கிரம், பிந்த்யாத் - போக்கும் மேலும், ஸாத்வீ - அழகியதும், மாத்வீரஸ மதுரதாபஞ்ஜநீ - தேனின் ரஸத்திலுள்ள மாதுர்யத்தை தோற்கடிப்பதும், ஸ்வர்துநீ ஸ்பர்த்திநீ - தேவ கங்கையுடன் சண்டையிடுவதும், மஞ்சரீதி: - அழகிய தோரணையுள்ளதுமான வாணீ வேணீ - வாக்குகளின் வரிசையானது, மாம் - என்னை, ஜடிதி - சீக்கிரமே, வ்ருணுதாத் - வரிக்கட்டும்.

தேவி காமாக்ஷியே! உனது க்ருபையால் தேனிலும் இனியதும், கங்கா பிரவாஹத்திற்கு ஸமமாயும், பாபத்தினால் ஏற்பட்ட அக்ஞானத்தை நீக்குகிறதாயுமுள்ள புனிதமான வாக்கிரியானது என்னை வந்து அடையவேணும்.

यस्या वाटी हृदयकमलं कौसुमी योगभाजां
यस्याः पीठी सततशिशिरा शीकरैर्माकरन्दैः ।
यस्याः पेटी श्रुतिपरिचलन्मौलिरत्नस्य काञ्ची
सा मे सोमाभरणमहिषी साधयेत्काङ्क्षितानि ॥ ७७ ॥

**யஸ்யா வாடீ ஹ்ருதயகமலம் கௌஸுமீ யோகபாஜாம்**
**யஸ்யா: பீடீ ஸததசிசிரா சீகரைர் மாகரந்தை: ।**
**யஸ்யா: பேடீ ச்ருதிபரிசலந் மௌளிரத்நஸ்ய காஞ்சீ**
**ஸா மே ஸோமாபரண மஹிஷீ ஸாதயேத் காங்க்ஷிதாநி ॥ [77]**

யோக பாஜாம் - யோக நிஷ்டர்களுடைய, ஹ்ருதயகமலம் - தாமரைப்பூபோன்ற ஹிருதயமானது, யஸ்யா: - எவளுக்கு, கௌஸுமீ வாடீ - புஷ்ப வாடிபோன்றிருக்கிறதோ, யஸ்யா: -

எவனுடைய, பீட – ஆஸன பீடிகையானது, மாகரந்தை: – தேன் பிரவாஹத்தின், சீகரை: – திவலைகளால், ஸதத சிசிரா – எப்போதும் சீதளமாயிருக்கிறதோ, ச்ருதிபரிசலத் – வேதத்தில் சொல்லப்படுகிற, மௌளிரத்னஸ்ய – சிரோபூஷணமான, யஸ்யா: – எந்த தேவிக்கு, காஞ்சீ – காஞ்சீபுரமானது, பேடீ – பெட்டிபோலிருக்கிறதோ, ஸா – அப்படிப்பட்ட, ஸோமாபரண மஹிஷீ – சந்திரனை ஆபரணமாகக்கொண்ட சிவனுடைய பத்நியான காமாக்ஷிதேவி, மே – என்னுடைய, காங்க்ஷிதாநி – இஷ்டங்களை, ஸாதயேத் – பூர்த்தி செய்யட்டும்.

யோகிகளுடைய ஹ்ருதயத்தை புஷ்பத் தோட்டமாக உடையவளும், எப்போதும் தேன் பிரவஹிக்கிறதால் குளிர்ந்ததான தாமரைப்பூ ஆஸனத்தையுடையவளும், வேதங்களின் சிரோரத்னமாக விளங்குகிறவளும், காஞ்சீபுரம் தனக்குப் பெட்டிபோலுள்ளவளுமான அந்த சந்திராபாண பரமசிவ பத்நியான காமாக்ஷிதேவீ எனது இஷ்டங்களை பூர்த்திசெய்ய வேணும்.

एका माता सकल जगतामीयुषी ध्यानमुद्रा-
मेकाम्राधीश्वरचरणयोरेकताना समिन्धे ।
ताटङ्कोद्यन्मणिगणरुचाताम्रकर्णप्रदेशा
तारुण्यश्रीस्तबकिततनुः तापसी कापि बाला ॥ ७८ ॥

ஏகா மாதா ஸகல ஜகதா மீயூஷீ த்யான முத்ரா
மேகாம்ப்ராதீச்வர சரணயோ ரேகதாநா ஸமிந்தே ।
தாடங்கோத்யந் மணிகணருசா தாம்ரகர்ணப்ரதேசா
தாருண்யஸ்ரீ ஸ்தபகித தநு: தாபஸீ காபி பாலா ॥ [78]

தாடங்க – காது குண்டத்திலிருந்து, உத்யத் மணிகண ருசா – உண்டாகிற ரத்ந ஸமூஹ காந்தியால், தாம்ரகர்ண ப்ரதேசா – சிவந்த வர்ணமாயுள்ள காது பிரதேசத்தை உடையவளும், தாருண்யஸ்ரீ ஸ்தபகித தநு: – யௌவந சோபையால் பூங்கொத்து போன்ற திருமேனியுள்ளவளும், ஸகல ஜகதாம் – எல்லா உலகங்களுக்கும், ஏகா மாதா – ஒரே தாயாராயும், ஏகாம்ராதீச்வர சரணயோ: – ஏகாம்ரநாதனுடைய திருவடிகளில், ஏகதாநாம் – நிலையுள்ளதான, த்யான முத்ராம் – த்யான முத்ரையை, ஈயுஷீ – அடைந்தவளாயுமிருக்கிற, பாலா தபஸீ – இளம் தாபஸீயாக, காபி – ஒருவள் (காமாக்ஷி), ஸமிந்தே – பிரகாசிக்கிறுள்.

ஏகாம்ரநாதனுடைய திருவடியிலேயே நிலைத்த த்யான முள்ளவளும், யௌவன சோபையால் பூங்கொத்துபோல் அழகிட்ட திருமேனியுள்ளவளும், உலகத்திற்கு ஒரே தாயும், காதிலுள்ள குண்டலத்தின் சோபையால் சிவந்து பிரகாசிக்கும் கன்ன பிரதேசத்தையுடையவளுமான காமாக்ஷிதேவி ஒரு இளம் தாபஸிபோல் விளங்குகிறாள்.

दन्तादन्तिप्रकटनकरी दन्तिभिर्मन्दयानै-
र्मन्दाराणां मदपरिणतिं मथ्नती मन्दहासैः ।
अङ्कूराभ्यां मनसिजतरोरङ्कितोराः कुचाभ्या-
मन्तःकाञ्चि स्फुरति जगतामादिमा कापि माता ॥ ७९ ॥

தந்தா தந்தி ப்ரகடனகரீ தந்திபிர் மந்தயானை:
மந்தாராணாம் மதபரிணதிம் மத்நதீ மந்தஹாஸை: 1
அங்கூராப்யாம் மதஸிஜதரோ: அங்கிதோரா: குசாப்யாம்
அந்த: காஞ்சி ஸ்புரதி ஜகதா மாதிமா காபி மாதா 11 [79]

மந்தயானை: – தனது மந்த கமனங்களால், தந்திபி: – யானைகளோடு, தந்தா தந்திப்ரகடனகரீ – தந்தத்தினால் நடத்தும் யுத்தத்தை வெளிப்படுத்துகிறவளும், மந்தஹாஸை: – தனது மந்தஹாஸங்களால், மந்தாராணாம் – மந்தார புஷ்பங்களுடைய, மதபரிணதிம் – கர்வப்பெருக்கை, மத்நதீ – நாசமாக்குபவளும், மனஸிஜ தரோ: – மன்மதனாகிற விருக்ஷத்தில், அங்கூராப்யாம் – அங்குரங்கள் போல் விளங்குகிற, குசாப்யாம் – ஸ்தானங்களால், அங்கிதோரா: – பிரகாசிக்கிற மார்பை உடையவளும், ஜகதாம் – உலகத்திற்கு, ஆதிமாதா – ஆதிமாதாகவுள்ள, காபி – ஒருவள் (காமாக்ஷி), அந்த: காஞ்சி – காஞ்சீ நகருக்குள், ஸ்புரதி – விளங்குகிறாள்.

தனது அழகிய மந்தகமனங்களால் யானைகளையும் ஜயித்தவளும், மந்தஹாஸங்களால் மந்தார புஷ்பங்களின் கர்வத்தை பங்கம் செய்கிறவளும், மன்மத விருக்ஷத்தின் அங்குரங்கள்போல் விளங்குகிற ஸ்தானங்களால் சோபிக்கிறவளுமான ஆதிமாதா ஸ்ரீ காமாக்ஷீ காஞ்சியில் ப்ரகாசிக்கிறாள்.

त्रियम्बककुटुम्बिनीं त्रिपुरसुन्दरीमिन्दिरां

पुलिन्दपतिसुन्दरीं त्रिपुरभैरवीं भारतीम् ।

मतङ्गकुलनायिकां महिषमर्दिनीं मातृकां

भणन्ति विबुधोत्तमा विहृतिमेव कामाक्षि ते ॥ ८० ॥

த்ரியம்பக குடும்பினீம் த்ரிபுரஸுந்தரீமிந்திராம்
புளிந்தபதி ஸுந்தரீம் த்ரிபுர பைரவீம் பாரதீம் |
மதங்ககுல நாயிகாம் மஹிஷ மர்த்திநீம் மாத்ருகாம்
பணந்தி விபுதோத்தமா விஹ்ருதிமேவ காமாக்ஷி தே || [80]

காமாக்ஷி ! - காமாக்ஷியே !, தே - உன்னுடைய, விஹ்ருதிமேவ - விலாஸத்தையே, திரியம்பக குடும்பினீம் - முக்கண்ணன் பத்தியான பார்வதியென்றும், த்ரிபுரஸுந்தரீம் - திரிபுரனின் அழகி என்றும், இந்திராம் - மஹாலக்ஷ்மியென்றும், புளிந்தபதி ஸுந்தரீம் - கிராத (வேடன்) ராஜன் பார்யையான கிராதியென்றும், த்ரிபுர பைரவீம் - த்ரிபுர பைரவியென்றும், பாரதீம் - பாரதியென்றும், மதங்ககுல நாயிகாம்-மதங்க குலநாயகியான மாதங்கியென்றும், மஹிஷ-மர்த்திநீம் - மஹிஷாஸுரமர்த்திநீயென்றும், மாத்ருகாம் - அகாராதி அக்ஷரப்ரிபாத்யையான மாதாவாகவும், விபுதோத்தமா: - வித்வத் சிரேஷ்டர்கள், பணந்தி - வர்ணித்து சொல்லுகிறார்கள்.

ஸ்ரீ காமாக்ஷி தேவியே ! கவிகளான வித்வான்கள் உனது விலாஸங்களையே, பார்வதியென்றும், திரிபுரஸுந்தரியென்றும், லக்ஷ்மியென்றும், வேட பத்னியென்றும், திரிபுர பைரவியென்றும், பாரதியென்றும், மாதங்கியன்றும், மஹிஷாஸுர மர்த்தினியென்றும், அக்ஷர மாத்ருகையென்றும் பலவாருக வர்ணித்துக் கூறுகிறார்கள்.

महामुनिमनोनटी महितरम्यकम्पातटी-

कुटीरकविहारिणी कुटिलबोधसंहारिणी ।

सदा भवतु कामिनी सकलदेहिनां स्वामिनी

कृपातिशयकिंकरी मम विभूतये शांकरी ॥ ८१ ॥

**மஹாமுனி மனோநட மஹிதரம்ய கம்பாதட**
**குடீரக விஹாரிணீ குடிலபோத ஸம்ஹாரிணீ ।**
**ஸதா பவது காமிநீ ஸகல தேஹிநாம் ஸ்வாமிநீ**
**க்ருபாதிசய கிங்கரீ மம விபூதயே சாங்கரீ ॥ [81]**

*மஹாமுனி மனோநட* – பெரிய ரிஷிகளின் மனதில் நடிகை போன்றவளும், *மஹிதரம்ய கம்பாதட குடீரக விஹாரிணீ* – மதிக்கத்தக்க அழகுள்ள கம்பாதடத்திலுள்ள ஆலயத்தில் விஹாரம் செய்பவளும், *குடிலபோத ஸம்ஹாரிணீ* – கோணலான அக்ஞானத்தை ஸம்ஹரிப்பவளும், *ஸகல தேஹிநாம் ஸ்வாமிநீ* – எல்லா பிராணிகளுக்கும் யஜமானியும், *கிருபாதிசய கிங்கரீ* - கருணையென்கிற அதிசய கிங்கரியை (வேலைக்காரியை) உடையவளுமான, *சாங்கரீ காமிநீ* – சங்கர பத்நியான ஸ்திரீயானவள், *மம* – என்னுடைய, *விபூதயே* – க்ஷேமத்தின் பொருட்டு, *ஸதா பவது* – எப்போதுமிருக்கட்டும்.

மஹர்ஷிகளின் மனதில் எப்போதும் விலாஸிக்கிறவளும், அழகிய கம்பா நதிக்கரையிலுள்ள ஆலயத்தில் விஹாரம் செய்துகொண்டிருப்பவளும், அக்ஞானத்தை நீக்குகிறவளும் ஸகல ப்ராணிகளுக்கும் ஈச்வரியும், கருணையென்கிற கிங்கரியுடன் கூடியவருமான சங்கர பத்நியான தேவி எப்போதும என்னுடைய க்ஷேமத்தைக் கொடுப்பவளாக இருக்கவேணும்.

जडाः प्रकृतिनिर्धना जनविलोचनारुंतुदा
नरा जननि वीक्षणं क्षणमवाप्य कामाक्षि ते ।
वचःसु मधुमाधुरीं प्रकटयन्ति पौरंदरी-
विभूतिषु विडम्बनां वपुषि मान्मथीं प्रक्रियां ॥ ८२ ॥

**ஜடா: ப்ரக்ருதி நிர்த்தனா: ஜநவிலோசனா ருந்துதா**
**நரா ஜநநி வீக்ஷணம் க்ஷணம் அவாப்ய காமாக்ஷி! தே ।**
**வசஸ்ஸு மது மாதுரீம் ப்ரகடயந்தி பௌரந்தரீ**
**விபூதிஷு விடம்பநாம் வபுஷி மான்மதீம் ப்ரக்ரியாம் ॥ [82]**

*ஜநநி:* – தாயே!, *காமாக்ஷி!* – காமாக்ஷி தேவியே!, *ஜடா:* – மூடர்களாயும், *ப்ரக்ருதி நிர்த்தனா* – பிறவியிலேயே தரித்ரர்களாயும், *ஜநவிலோசனாருந்துதா:* – ஜனங்களுடைய

கண்களுக்கு அருவருப்பைக் கொடுக்கக்கூடிய ரூபமுள்ளவர்களுமான, நரா: - மனிதர்கள், தே - உன்னுடைய, வீக்ஷணம் - கடாக்ஷத்தை, க்ஷணம் - க்ஷணமாவது, அவாப்ய - அடைந்து, வசஸ்ஸு - வாக்கில், மதுமாதுரீம் - தேனின் இனிப்பையும், பௌரந்தரீ விபூதிஷு - இந்திரனுடைய ஐஸ்வர்யங்களில், விடம்பநாம் - அலக்ஷ்யத்தையும், வபுஷி - சரீரத்தில், மான்மதீம் - மன்மதனுக்கொப்பான, ப்ரக்ரியாம் - போக்கையும், ப்ரகடயந்தி - ப்ரகாசப்படுத்துகிறார்கள்.

தாயே! காமாக்ஷி! மூடர்களும், தரித்ரர்களும், குரூபிகளும்கூட உனது கடாக்ஷ வீக்ஷணத்தை க்ஷணம் பெற்றால் கூட, தேனுக்கு ஸமமான வாக்கு மஹிமையையும், இந்திரனுடைய ஐஸ்வர்யத்திற்கு மேலான தனத்தையும், மன்மதனுக்கொப்பான சரீர அழகையும் பெறுகிறார்கள்.

घनस्तनतटस्फुटत्स्फुरितकञ्चुकी चञ्चली-

कृतत्रिपुरशासना सुजनशीलितोपासना ।

दृशोः सरणिमश्नुते मम कदा नु काञ्चीपुरे

परा परमयोगिनां हृदय चित्कला पुष्कला ॥ ८३ ॥

கனஸ்தன தடஸ்புடத் ஸ்புரித கஞ்சுளீ சஞ்சலீ
க்ருதத்ரிபுர ஶாஸநா ஸுஜந சீலிதோ பாஸநா ।
த்ருசோ: ஸரணிமஶ்நுதே மம கதா நு காஞ்சீ புரே
பரா பரமயோகிநாம் ஹ்ருதய சித்கலா புஷ்கலா ॥ [83]

கனஸ்தநதட - கடினமான ஸ்தந பிரதேசத்தில், ஸ்புட ஸ்புரித, நன்கு விளங்குகிற, கஞ்சுளீ - ரவிக்கையால் - சஞ்சலீ க்ருத - சஞ்சலமாக்கப்பட்ட: த்ரிபுரஶாஸநா - த்ரிபுராரியான பரமேச்வரனை உடையவளும், ஸுஜந சீலிதோபாஸநா - ஸத்துக்களுடைய உபாஸனத்தோடு கூடியவளும், பரமயோகிநாம் ஹ்ருதய - உத்தமயோகிகளுடைய ஹ்ருதயத்தில், புஷ்கலா - பரிபூர்ணையான, சித்கலா - சைதன்ய மூர்த்தியாயுள்ள தேவியானவள், (காஞ்சீபுரே - காஞ்சீநகரத்தில்), மம - என்னுடைய, த்ருஶோ: - கண்களின், ஸரணிம் - மார்க்கத்தை, கதா நு - எப்போது, அஶ்நுதே - அடைவாளோ?

தனது ஸ்தன பிரதேசத்தில் விளங்குகிற கஞ்சுக சோபையால் பரமசிவனுடைய மனதை வசப்படுத்துகிற வளும், உத்தம யோகிகளால் உபாஸிக்கப்படுகிறவளுமான சிந்மூர்த்தியான காமாக்ஷீதேவி காஞ்சியில் என் கண்களுக்கு எப்போது புலப்படுவாளோ ?

कवीन्द्रहृदयेचरी परिगृहीतकाञ्चीपुरी
निरूढकरुणाझरी निखिललोकरक्षाकरी ।
मनःपथदवीयसी मदनशासनप्रेयसी
महागुणगरीयसी मम दृशोस्तु नेदीयसी ॥ ८४ ॥

கவீந்த்ர ஹ்ருதயே சரீ பரிக்ருஹீத காஞ்சீபுரீ
நிரூட கருணாஜரீ நிகில லோக ரக்ஷாகரீ I
மந: பததவீயஸீ மதன சாஸந ப்ரேயஸீ
மஹாகுண கரீயஸீ மம த்ருசோ அஸ்து நேதீயஸி II [84]

கவீந்த்ர ஹ்ருதயேசரீ – கவிச்ரேஷ்டர்களின் மனதில் ஸஞ்சரிப்பவளும, பரிக்ரஹீத காஞ்சிபுரீ – காஞ்சீபுரியை வஸிக்க இடமாகக் கொண்டவளும், நிருடகருணாஜரீ - நிறைந்த கருணா ப்ரவாஹமுள்ளவளும், நிகில லோகரக்ஷா கரீ – ஸகல லோகங்களையும் ரக்ஷிப்பவளும், மன: பததவீயஸீ - மனஸ்ஸுக்கு எட்டாதவளும், மதன சாஸன ப்ரேயஸீ - மன்மத சத்ருவான பரமேச்வரனின் காதலியும், மஹாகுண கரீயஸீ – உத்தம குணங்களால் பெருமையடைந்த வளுமான தேவீ, மம - என்னுடைய, த்ருசோ: கண்களுக்கு, நேதீயஸீ – நெருங்கியவளாக எப்போது ஆவாளோ ?

கவிச்ரேஷ்டர்களின் மனதில் உலாவுகிறவளும், கருணை ப்ரவாஹ ரூபமாயும் – ஸகல லோகரக்ஷிணியும் மனதிற் கெட்டாத மஹிமையுள்ளவளுமான, மன்மத சத்ரு பிரியை யான காமாக்ஷி தேவீ எப்போது என் கண்களுக்கு நெருங்கிய வளாவளோ ?

धनेन न रमामहे खलजनान्न सेवामहे
न चापलमयामहे भवभयान्न दूयामहे
स्थिरां तनुमहे तरां मनसि किं च काञ्चीरत-
स्मरान्तक कुटुम्बिनीचरणपल्लवोपासनाम् ॥ ८५ ॥

தனேந ந ரமாமஹே கலஜநாந் ந ஸேவாமஹே
ந சாபலமயாமஹே பவபயாந் ந துயாமஹே I
ஸ்திராம் தநுமஹே தராம் மனஸி கிம் ச காஞ்சீரத
ஸ்மராந்தக குடும்பினீ சரணபல்லவோபாஸநாம் II [85]

தனேந — பணத்தால், ந ரமாமஹே — திருப்தியடைய மாட்டோம் கலஜநாந்- துஷ்ட ஜனங்களை, ந ஸேவாமஹே- அநுஸரிக்கமாட்டோம், சாபலம் — சஞ்சலத்தனத்தை, ந அயாமஹே - அடையமாட்டோம். பவபயாத் — ஸம்ஸார பயத்திலிருந்து, ந துயாமஹே — கிலேசப்படமாட்டோம், கிந்து - ஆனால், காஞ்சீரத — காஞ்சியில் ரஸிக்கிற, ஸ்மராந்தக குடும்பினீ — மன்மத சத்ருவான பகவானுடைய மனைவியின், சரணபல்லவோபாஸனும் - திருவடிகளாகிற துளிர்களின் உபாஸனத்தையே, ஸ்திரம் — உறுதியாக, மனஸி — மனதில், தநுமஹேதராம் — செய்துகொண்டிருப்போம்.

பண ஆசையால் திருப்தியற்றும், துர்ஜன ஸஹவாஸத்தை வெறுத்தும், ஆசையை விட்டும், ஸம்ஸார பயத்தை ஒழித்தும், பரமேச்வரனுடைய பத்நியான காமாக்ஷி தேவியின் திருவடித்தாமரை த்யானத்தையே உறுதியாகச் செய்து வருவோம்.

सुराः परिजना वपुर्मनसिजाय वैरायते
त्रिविष्टपनितम्बिनीकुचतटी च केलीगिरिः ।
गिरः सुरभयो वयस्तरुणिमा दरिद्रस्य वा
कटाक्षसरणौ क्षणं निपतितस्य कामाक्षि ते ॥ ८६ ॥

ஸுரா: பரிஜநா வபு: மனஸிஜாய வைராயதே
த்ரிவிஷ்டபநிதம்பினீ குசதட ச கேளிகிரி: I
கிர: ஸுரபயோ வய: தருணிமா தரித்ரஸ்ய வா
கடாக்ஷஸரணௌ க்ஷணம் நிபதிதஸ்ய காமாக்ஷி தே II [86]

காமாக்ஷி தேவியே! தே — உன்னுடைய, கடாக்ஷஸரணௌ — கடாக்ஷ மார்க்கத்தில், க்ஷணம் — க்ஷண காலமாவது, நிபதிதஸ்ய — விழுந்தவனுக்கு, தரித்ரஸ்ய வா — தரித்திரனயிருந்தாலும், (இவனுக்கு) ஸுரா: — தேவர்கள், பரிஜநா: — வேலைக்காரர்களாகிறார்கள். வபு: — சரீரமானது,

மனஸிஜாய – மன்மதனுக்கு, வைராயதே – எதிரியாகிறது. திரிவிஷ்டபநிதம்பினீ – தேவஸ்திரீகளுடைய, குசகட – ஸ்தநதேசமானது கேளீ கிரி: – விளையாட்டு பர்வதமாயிருக்கிறது. கிர: – வாக்குகள். ஸாரபய: – மதுரமாகின்றன. வய: – வயஸ், தருணிமா – யௌவனமாகிறது.

ஏ! காமாக்ஷி தேவியே! உனது கடாக்ஷ வழியில் ஸம்பந்தப்பட்டவன் தரித்ரனாயிருந்தபோதிலும் அவன் சகல க்ஷேமத்தையும் அடைகிறான் அவனுக்கு தேவர்கள் கிங்கரர்கள், தேவஸ்திரீகளின் போகம், மதுரமான வாக்ஜரி, யௌவனம் இவைகள் கிடைக்கின்றன.

पवित्रय जगत्त्रयीविबुधबोधजीवातुभिः
पुरत्रयविमर्दिनः पुलककञ्चुलीदायिभिः ।
भवक्षयविचक्षणैर्व्यसनमोक्षणैर्वीक्षणै
र्निरक्षरशिरोमणिं करुणयैव कामाक्षि माम् ॥ ८७ ॥

பவித்ரய ஜகத்ரயீ விபுதபோத ஜீவாதுபி:
புரத்ரய விமர்த்தின: புளககஞ்சுளீ தாயிபி: |
பவக்ஷயவிசக்ஷணை: வ்யஸனமோக்ஷணைர் வீக்ஷணை:
நிரக்ஷர ஶிரோமணிம் கருணயைவ காமாக்ஷி மாம் || [87]

காமாக்ஷியே! ஜகத்ரயீ – மூன்று லோகத்திலுள்ள, விபுதபோத - ஞானிக்கு, ஜீவாதுபி: – உயிர் ஸ்தானங்களையும், புரத்ரய விமர்த்தின: – த்ரிபுர ஸம்ஹாரியான பரமேச்வரனுக்கு, புளககஞ்சுளீ தாயிபி:–மயிர் கூச்சலாகிற கஞ்சுகத்தை கொடுப்பவையும், பவக்ஷய விசக்ஷணை:–ஸம்ஸார பந்த நாசத்தில் ஸாமர்த்தியமுள்ளவையும், வ்யஸந மோக்ஷணை: – துக்கத்தை நீக்குகிறவைகளுமான, வீக்ஷணை: – கடாக்ஷங்களால் கருணையைவ – தயையால், நிரக்ஷர ஶிரோமணிம் – அக்ஷர ஞானமற்ற, மாம் – என்னை, பவித்ரய – பரிசுத்தனுக்குவாயாக.

காமாக்ஷி தேவியே! மூன்று உலகிலுள்ள ஞானிகளுக்கும் உபஜீவ்யமானவையும், பரமேச்வரனுக்கு ஆனந்தமயிர் கூச்சலைக் கொடுப்பவையும், ஸம்ஸாரபந்த நிவிருத்தியில்

சக்தியுள்ளவையும், துக்கத்தை நீக்கவல்லவையுமான உனது கடாக்ஷங்களால் அக்ஞானியான என்னை தயையால் புனிதனாக்குவாயாக.

कदा कलितखेलनाः कतमिवाम्ब काञ्चीपुरे

कलायमुकुलत्विषः शुभकदम्बदूर्वाङ्कुराः ।

पयोधरभरालसाः कविजनेषु ते बन्धुराः

पचेलिमकृपारसाः मम पतन्ति मार्गे दृशोः ॥ ८८ ॥

கதா கலித கேலநா: கதமிவாம்ப காஞ்சீபுரே
கலாய முகுளத்விஷ: சுபகதம்ப தூர்வாங்குரா: ।
பயோதர பராலஸா: கவிஜநேஷு தே பந்துரா:
பசேளிம க்ருபாரஸா: மம பதந்தி மார்க்கே த்ருசோ: ॥ [88]

அம்ப - தாயே! காமாக்ஷியே, தே - உன்னுடைய, கலித கேலநா: - கிரீடையுடன் கூடியவைகளும், கலாய முகளத்விஷ: - காசாம் பூவின் மொட்டுப்போன்ற காந்தியுள்ளவையும், சுபகம்ப தூர்வாங்குரா: - மங்கள ஸமூஹமாகிற புல்லுக்கு முனைபோன்றவையும், பயோதர பாராலஸா:- ஸ்தன பாரத்தால் சிரமப்பட்டவையும், கவிஜநேஷு - கவிகளிடம், பந்துரா: - மனோஹரங்களுமான, பசேளிம க்ருபா ரஸா: - பரிபக்வமான கிருபாரஸங்கள், காஞ்சீபுரே - காஞ்சியில், மம - எனது, த்ருசோ: - கண்களின், மார்க்கே - மார்க்கத்தில், கதமிவ - எப்படி, பதந்தி - விழுமோ?

தாயே! காமாக்ஷி! க்ரீடாரஸம் பொருந்தியவையும், காசாம் பூவைப்போல் அழகிய சோபையுள்ளவையும், மங்களாங்களும், கவிகளுக்கு மனோஹரங்களுமான க்ருபா ரஸங்கள் என் கண்களில் எப்போது பார்க்கக் கிடைக்குமோ?

अशोध्यमचलोद्भवं हृदयनन्दनं देहिना-

मनर्घमधिकाञ्चि तत्किमपि रत्नमुद्द्योतते ।

अनेन समलंकृता जयति शङ्कराङ्कस्थली

कदास्य मम मानसं व्रजति पेटिकाविभ्रमम् ॥ ८९ ॥

அசோத்ய மசலோத்பவம் ஹ்ருதய நந்தனம் தேஹிநாம்
அனர்க்கமதிகாஞ்சி தத்கிமபி ரத்ந முத்யோததே I
அநேன ஸமலங்க்ருதா ஜயதி சங்கராங்க ஸ்தலீ
கதாஸ்ய மம மானஸம் வ்ரஜதி பேடிகா விப்ரமம் II [89]

அசலோத்பவம் – பர்வதத்தில் உண்டானதும், அசோத்யம் – சுத்தி செய்ய அவச்யமற்றதும், தேஹிநாம் – பிராணிகளுடைய, ஹ்ருதயநந்தனம் – ஹ்ருதயத்திற்கு ஆனந்தகரமானதும், அநர்க்கம் – விலை மதிப்பை தாண்டியதுமான, ரத்னம் – ரத்நமானது, அதிகாஞ்சி – காஞ்சியில், உத்யோததே – விளங்குகிறது, அநேந – இந்த ரத்நத்தால், சங்கராங்கஸ்தலீ – சங்கருடைய சரீர தேசமானது, ஸமலங்க்ருதா – அலங்கரிக்கப்பட்டதாக, ஜயதி – விளங்குகிறது; அஸ்ய – இந்த ரத்நத்திற்கு, மம மானஸம் – எனது மனதானது, பேடிகா விப்ரமம் – பெட்டியாகிற நிலைமையை, கதா – எப்போது, வ்ரஜதி – அடையப்போகிறதோ ?

காமாக்ஷியாகிற உயர்ந்த ரத்னம் காஞ்சியில் விளங்குகிறது. அது மலையில் உண்டாகியது. சாணை முதலிய சுத்தி வேண்டியதில்லை. பிராணிகளின் ஹ்ருதயத்தில் தரிக்கத் தக்கது. இதனால் பகவான் பரமசிவனுடைய திருமேனியே சோபிக்கிறது. இதற்கு எப்போது என் மனஸ் ஒரு பெட்டியாக ஆகப்போகிறதோ ?

परामृतझरीप्लुता जयति नित्यमन्तश्चरी
भुवामपि बहिश्चरी परमसंविदेकात्मिका ।
महद्भिरपरोक्षिता सततमेव काञ्चीपुरे
ममान्वहमहंमतिर्मनसि कापि माहेश्वरी ॥ ९० ॥

பராம்ருத ஜரீப்லுதா ஜயதிநித்யம் அந்தஸ்சரீ
புவாமபி பஹிஸ்சரீ பரமஸம்விதேகாத்மிகா I
மஹத்பிரபரோக்ஷிதா ஸததமேவ காஞ்சீபுரே
மமாந்வஹ மஹம்மதிர்மனஸி காபி மாஹேச்வரீ II [90]

பராம்ருத ஜரீப்லுதா - உயர்ந்த அம்ருத ப்ரவாஹத்தினால் நனைந்தவளும், நித்யம் – எப்போதும், அந்தஸ்சரீ – பிராணிகள் ஹ்ருதயத்தில் ஸஞ்சரிப்பவளும், புவாம் – உல

கின், பஹிஸ்சரீ – வெளியில் ஸஞ்சரிப்பவளும், பரமஸம் விதேகாத்மிகா – உத்க்ருஷ்ட ஸம்வித் ஸ்வரூபிணியும், காஞ்சீபுரே - காஞ்சியில், மஹத்பி: - பெரியோர்களால், அந்வஹம் – தினம் தினம், அபரோக்ஷிதா – தர்சிக்கப்பட்டவளுமான, மாஹேச்வரீ – மஹேச்வரனுடைய, அஹம்மதி: – அபேதமான வஸ்துவான காமாக்ஷி, மம - என்னுடைய, மனஸி – மனதில், ஸததமேவ - எப்போதுமே, ஜயதி - விளங்குகிருள்

அம்ருத தாரையால் நனைந்தவளும் உலகில் உள்ளும், புறமும் ஸஞ்சரிப்பவளும் ஸம்வித் ஸ்வரூபிணியும், காஞ்சியில் மஹான்களால் தினம் ஸேவிக்கப்பட்டவளும், மஹேச்வரனுடைய அஹம்காரரூபியான காமாக்ஷி எப்போதும் என் மனதில் விளங்குகிருள்.

तमोविपिनधाविनं सततमेव काञ्चीपुरी-
विहाररसिका परा परमसंविदुर्वीरुहे ।
कटाक्षनिगलैर्दृढं हृदयदुष्टदन्तावलं
चिरं नयतु मामकं त्रिपुरवैरिसीमन्तिनी ॥ ९१ ॥

தமோவிபின தாவினம் ஸததமேவ காஞ்சீபுரீ
விஹார ரஸிகா பரா பரமஸம்விதுர்வீருஹே
கடாக்ஷ நிகளைர்த்ருடம் ஹ்ருதய துஷ்டதந்தாவளம்
ஸ்திரம் நயது மாமகம் த்ரிபுரவைரி ஸீமந்தினீ ॥ [91]

த்ரிபுரவைரி ஸீமந்தனீ – த்ரிபுராரியான பரமசிவ பத்நியான காமாக்ஷி தேவி, தமோவிபிநதாவினம் - அக்ஞான இருட்டாகிற காட்டில் ஓடியலைகிறதான, மாமகம் – என்னுடைய, ஹ்ருதய துஷ்டதந்தாவளம – மனதாகிற துஷ்ட யானையை, கடாக்ஷ நிகளை: – தனது கடாக்ஷமாகிற சங்கிலிகளால், பரமஸம்விதுர்வீருஹே - பரமமான ஸம்வித் என்கிற மரத்தில், ஸததமேவ–எப்போதும், காஞ்சீபுரீ விஹாரரஸிகா– காஞ்சியில் விளையாடுவதில் ஆனந்தமுள்ளவளும், பரா – உத்க்ருஷ்டையுமான காமாக்ஷி தேவி, த்ருடம் - கெட்டியாக, நயது – கட்டிப்போடட்டும்.

த்ரிபுராரிதேவியும், காஞ்சீ வாஸரஸிகையுமான அந்த உயர்ந்த தேவியானவள் அக்ஞான அரண்யத்தில் ஓடியாடிக் கொண்டிருக்கிற எனது மனதாகிற துஷ்டயானையை தனது கடாக்ஷமென்கிற சங்கிலியால் ஸம்வித் என்கிற மரத்தில் கெட்டியாக கட்டிப்போடட்டும்.

त्वमेव सति चण्डिका त्वमथ देवि चामुण्डिका
त्वमेव परमातृका त्वमसि योगिनीरूपिणी ।
त्वमेव किल शांभवी त्वमिह कामकोटी जया
त्वमेव विजया त्वयि त्रिजगदम्ब किं ब्रूमहे ॥ ९२ ॥

த்வமேவ ஸதி சண்டிகா த்வமத தேவி சாமுண்டிகா
த்வமேவ பரமாத்ருகா த்வமஸி யோகிநீரூபிணீ ।
த்வமேவ கில சாம்பவீ த்வமிஹ காமகோடீ ஜயா
த்வமேவ விஜயா த்வயி த்ரிஜகதம்ப கிம் ப்ரூமஹே [92]

அம்ப - தாயே! தேவி! - தேவியே! ஸதி - பதிவ்ரதையே! த்வமேவ - நீயே, சண்டிகா - சண்டிகாதேவியாயிருக்கிறாய், அதத்வம் - மேலும் நீ, சாமுண்டிகா - சாமுண்டிகை, த்வமேவ - நீயே, பரமாத்ருகா - அக்ஷரஸ்வரூபியானவள், த்வம் - நீயே, யோகிநீ ரூபணீ - யோகிநீ ரூபம் கொண்டவள், த்வமேவ - நீயே, சாம்பவீ - சம்பு பார்யை, த்வமேவ ஜயா விஜயா - நீயே ஜயா விஜயா, த்வயி - உன்னிடமே, த்ரிஜகத் - மூன்று உலகமுமிருக்கிறது. கிம் ப்ரூமஹே - இந்த அதிசயத்தை என்ன சொல்லுவோம்.

தாயே! நீயே ஸகல தேவதா ஸ்வரூபணியாக இருக்கிறாய். சண்டிகா, சாமுண்டிகா, மாத்ருகா, யோகிநீ, சாம்பவீ, காமகோடி, ஜயா, விஜய ஆகிய ரூபங்கள் எல்லாம் நீயே! உன்னிடமே மூவுலகும் நிற்கிறது. இந்த அதிசயத்தை எப்படி வர்ணிப்போம்.

परे जननि पार्वति प्रणतपालिनि प्रातिभ
प्रदात्रि परमेश्वरि त्रिजगदाश्रिते शाश्वते ।
त्रियम्बककुटुम्बिनि त्रिपदसङ्गिनि त्रीक्षणे
त्रिशक्तिमयि वीक्षणं मयि निधेहि कामाक्षि ते ॥ ९३ ॥

பரே ஜனநி பார்வதி ப்ரணதபாலிநி ப்ராதிப-
ப்ரதாத்ரி பரமேச்வரி த்ரிஜகதாஶ்ரிதே ஶாஶ்வதே ।
த்ரியம்பக குடும்பினி த்ரிபதஸங்கிநி த்ரீக்ஷணே
த்ரிசக்திமயி வீக்ஷணம் மயி நிதேஹி காமாக்ஷி தே ॥ [93]

பரே ! – உயர்ந்தவளே, பார்வதி – பார்வதியே, ப்ரணத பாலிநி – நமஸ்கரிப்பவனை காப்பவளே, ப்ராதிபப்ரதாத்ரி – பிரதிபையென்ற ஞானத்தைக் கொடுப்பவளே, பரமேச்வரீ – பரமேச்வரியே, த்ரிஜகதாஶ்ரிதே – மூன்று உலகங்களுக்கும் ஆச்ரமாயிருப்பவளே, ஶாஶ்வதே – நித்யமாயிருப்பவளே, த்ரியம்பக குடும்பினி – மூன்று கண்ணுள்ள பகவானின் மனைவியே, த்ரிபத ஸங்கினி – கர்ம, ஞான, பக்தி என்ற ஸ்தானங்களில் ஸம்பந்தப்பட்டவளே, த்ரீக்ஷணே – மூன்று கண்களையுடையவளே, த்ரிசக்திமயி – இச்சை, ஞானம், கிரியை என்ற மூன்று சக்தி ஸ்வரூபிணியே, (காமாக்ஷி) வீக்ஷணம் – உனது கடாக்ஷத்தை, மயி – என்னிடம் நிதேஹி – வைப்பாயாக.

காமாக்ஷியே, தாயே, பர்வதராஜ புத்திரியும், பக்தர்களை ஸம்ரக்ஷிப்பவளும், மூன்று உலகங்களுக்கும் ஆதாரபூதையும், கர்ம, ஞான, பக்திமார்க்க ஸம்பந்தமுள்ளவளும், இச்சா – ஞான – க்ரியா சக்தி ஸ்வரூபிணியாயுமுள்ள நீ என் பேரில் கடாக்ஷத்தை வைப்பாயாக.

मनोमधुकरोत्सवं विदधती मनीषाजुषां
स्वयंप्रभववैखरीविपिनवीथिकालम्बिनी ।
अहो शिशिरिता कृपामधुरसेन कम्पातटे
चराचर विधायिनी चलति कापि चिन्मञ्जरी ॥ ९४ ॥

மனோமதுகரோத்ஸவம் விதததீ மநீஷாஜுஷாம்
ஸ்வயம்ப்ரபவ வைகரீ விபினவீதிகாலம்பிநீ ।
அஹோ ஶிஶிரிதா க்ருபா மதுரஸேந கம்பாதடே
சராசர விதாயநீ சலதி காபி சின்மஞ்ஜரீ ॥ [94]

மனீஷாஜுஷாம் – ஞானவான்களுடைய, மனோமது கரோத்ஸவம் – மனதாகிற வண்டுகளுக்கு ஆனந்தத்தை, விதததீ – செய்கிறதும், ஸ்வயம்ப்ரபவவைகரீ – தானாக உண்

டாகிற வேத வாக்காகிற, விபினவீதிகாலம்பிநீ – உத்யான மார்க்கத்தில் விளங்குவதும், க்ருபாமதுரஸேந – கருணாரஸ மாதுர்யத்தால், ஶிஶிரிதா – குளிர்ச்சியடைந்ததுமான, சின் மஞ்ஜரீ காபி:– சித்ஸ்வரூபியான பூங்கொத்து ஒன்று, சராசர விதாயிநீ - சராசர வஸ்துக்களை ஸ்ருஷ்டி செய்கிறதாக, கம்பாதடே – கம்பைக்கரையில், சலதி – அசைந்துகொண் டிருக்கிறது. அஹோ ! – அதிசயம்.

கம்பா நதிக்கரையில் சித்ஸ்வரூபமான ஒரு பூங்கொத்து விளங்குகிறது அது ஞானிகளின் மனதான வண்டுகளை ஆனந்திக்கச்செய்கிறது, வேத வாக்குகளின் ஆதாரம் பெற்றது. கருணாரஸத்தால் சீதளமாயிருக்கிறது. அது சராசர ஸ்ருஷ்டி செய்கிறது. ஆச்சரியம் !

त्वयैव जगदम्बया भुवनमण्डलं सूयते
त्वयैव करुणार्द्रया तदथ रक्षणं नीयते ।
त्वयैव खरकोपया नयनपावके हूयते
त्वयैव सति कामया जगति संततं स्थीयते ॥ ९५ ॥

த்வயைவ ஜகதம்பயா புவனமண்டலம் ஸூயதே
த்வயைவ கருணார்த்ரயா ததத ரக்ஷணம் நீயதே 1
த்வயைவ கரகோபயா நயநபாவகே ஹூயதே
த்வயைவ ஸதி காமயா ஜகதி ஸந்ததம் ஸ்தீயதே 11 [95]

ஸதி - ஸதிதேவியே, ஜகதம்பயா – லோகமாதாவான, த்வயைவ – உன்னாலேயே, புவனமண்டலம் - இந்த லோக மானது, ஸூயதே – உண்டு பண்ணப்படுகிறது, தத் – அந்த லோகமானது, கருணார்த்ரய – க்ருபா ரஸம் நிறைந்த, த்வ யைவ – உன்னாலேயே, ரக்ஷணம் நீயதே - ரக்ஷிக்கப்படுகிறது கரகோபயா - உக்ர கோபமுள்ள, த்வயைவ - உன்னாலேயே, நயந பாவகே – கண் அக்னியில், ஹூயதே – ஹோமம் செய்யபபடுகிறது, காமயா - காமகோடி என்கிறபெயருள்ள, த்வயைவ – உன் மட்டிலுமே, ஜகதி – உலகில், ஸந்ததம் – சாச்வதமாக, ஸ்தீயதே - இருக்கப்படுகிறது.

ஸதி தேவியான காமாக்ஷியே, நீயே இவ்வுலகத்திற்கு ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார காரணமாயிருக்கிறாய். இந்த புவனமண்டலம் உன்னாலேயே ஸ்ருஷ்டிக்கப்பகிறது. உனது

கருணாரஸமாகிற ஈரத்தால் ரக்ஷித்து வளர்க்கப்படுகிறது. பிறகு உக்ர கோபமுள்ள உன்னாலேயே நேத்ராக்நியில் ஹோமம் செய்யப்படுகிறது. இவ்வூனாவிலும் நீ மட்டும் காம கோடி ரூபத்துடன் சாச்வதமாக விளங்குகிறாய்.

चराचरजगन्मयीं सकलहृन्मयीं चिन्मयीं
गुणत्रयमयीं जगत्त्रयमयीं त्रिधाममयीम् ।
परापरमयीं सदा दशदिशां निशाहर्मयीं
परां सततसन्मयीं मनसि कामकोटीं भजे ॥ ९६ ॥

சராசர ஜகந்மயீம் ஸகலஹ்ருந்மயீம் சின்மயீம்
குணத்ரயமயீம் ஜகத்ரயமயீம் த்ரிதாமாமயீம் !
பராபரமயீம் ஸதா தசதிசாம் நிசாஹர்மயீம்
பராம் ஸததஸந்மயீம் மநஸி காமகோடீம் பஜே ll [96]

*சராசர ஜகந்மயீம்* – சராசரரூப ஜகத்ரூபிணியும், *ஸகல ஹ்ருந்மயீம்* - ஸகல ஜனங்களின் மனோரூபிணியும், *சிந்மயீம்* - சித்ஸ்வரூபியும், *குணத்ரயமயீம்* – ஸத்வம், ரஜஸ், தமஸ், என்ற குணமயியும், *ஜகத்ரயமயீம்* – மூன்றுலோக ரூபிணியும், *த்ரிதாமாமயீம்* - ஸூர்ய-சந்த்ர - அக்நிமயியாயும், *பராபரமயீம்* – பரம்-அபரமென்கிற உயர்வுள்ளவளும், *தசதிசாம்* – பத்து திக்குகளுக்கும், *நிசாஹர்மயீம்* – இரவுபகல் ரூபிணியும், *பராம்* – உத்க்ருஷ்ட, *ஸந்மயீம்* - ஸத்ஸ்வரூபிணியுமான, *காமகோடீம்* – காமகோடியை, *மனஸி* – மனதில், *பஜே* – ஸேவிக்கிறேன்.

ஸ்தாவர ஜங்கம ஜகத்ரூபிணியும், ஸத்வ ரஜஸ் தமஸ் மூன்று குணம், மூன்றுலகம், மூன்று தேஜஸ், அஹோராத்ரம் இவைகளின் ஸ்வரூபிணியும், ஸத், சித்ஸ்வரூபிணியும் பராபரமயமான ஸ்வரூபிணியுமான காமகோடியை மனதில் ஸேவிக்கிறேன்.

सति जगदम्बिके हरकुटुम्बिनि वक्त्ररुचा
जितशरदम्बुजे घनविडम्बिनि केशरुचा ।
परमवलम्बनं भव समाहतकाञ्चिपुरे
मम गतसंविदो जडिमडम्बरताण्डविनः ॥ ९७ ॥

ஸதி ஜகதம்பிகே ஹர குடும்பினி வக்த்ரருசா
ஜித ஶரதம்புஜே கன விடம்பினி கேஶருசா I
பரமவலம்பனம் பவ ஸமாத்ருத காஞ்சிபுரே
மம கத ஸம்விதோ ஜடிமடம்பர தாண்டவிந: II [97]

*ஸதி – ஸதிதேவியே! ஜகதம்பிகே – ஜகந்மாதாவாயும், ஹரகுடும்பினி – ஹரனின் மனைவியும், வக்த்ரருசா – முக காந்தியால், ஜித சரதம்புஜே – ஜயிக்கப்பட்ட சரத்கால தாமரையையுடையவளும், கேசருசா – கூந்தலின் காந்தியால், கன விடம்பினி! – மேகத்தை பரிஹஸிப்பவளும், ஸமாத்ருதகாஞ்சீபுரே – காஞ்சீபுர வாஸத்தை ஆதரிப்பவளுமான காமாக்ஷியே! ஜடிமடம்பர தாண்டவிந: – அக்ஞானத்தின் ஆடம்பரத்தால் கூத்தாடுகிறவனும், கத ஸம்வித: – ஞானத்தை இழந்தவனுமான, மம – எனக்கு, பரம் – உயர்ந்த, அவலம்பனம் – ஆதாரப்பிடிப்பாக, பவ – ஆக வேணும்.*

*ஜகதம்பிகையும் ஹரபத்நியும் சரத்கால தாமரை போன்ற முகமுள்ளவளும், மேகங்களுக்கு ஸமமான கூந்தலை தரிப்பவளும், காஞ்சீவாஸினியுமான ஏ! ஸதிதேவியே! ஞானத்தையிழந்து அக்ஞான ஆர்ப்பாட்டத்தால் கூத்தாடுகிற எனக்கு நீ பரம ஆதாரமாயிருந்து காப்பாயாக.*

भुवनजननि भूषाभूतचन्द्रे नमस्ते
कलुषशमनि कम्पातीरगेहे नमस्ते ।
निखिलनिगमवेद्ये नित्यरूपे नमस्ते
परशिवमयि पाशच्छेदहस्ते नमस्ते ॥ ९८ ॥

புவனஜநநி பூஷாபூதசந்த்ரே நமஸ்தே
கலுஷஶமநி கம்பாதீரகேஹே நமஸ்தே I
நிகில நிகமவேத்யே நித்யரூபே நமஸ்தே
பரசிவமயி! பாஶச்சேதஹஸ்தே நமஸ்தே II [98]

*புவனஜநநி! – உலகத்திற்கு மாதாவே, பூஷாபூத சந்த்ரே – சந்திரனை அலங்காரமாகக் கொண்டவளே, தே – உனக்கு, நம: – நமஸ்காரம், கலுஷஶமநி! – பாபத்தை போக்குகிறவளே! கம்பாதீரகேஹே – கம்பாநதிக்கரையில்*

ஆலயம் கொண்டவனே, நமஸ்தே – உனக்கு நமஸ்காரம். நிகிலநிகமவேத்யே – எல்லா வேதங்களாலும் அறியக் கூடியவளே, நித்யரூபே – சாச்வதமாயிருப்பவளுமான தே: உனக்கு, நம: - நமஸ்காரம், பரசிவமயி! – பிரமசிவரூபிணியும், பாஶச்சேதஹஸ்தே! – பாஶத்தையும் அங்குசத்தை கையில் தரிப்பவளுமான, தே – உனக்கு நம: – நமஸ்காரம்.

*சந்திரனை அலங்காரமாகக்கொண்டவளும், ஜகத்மாதாவும், பரமமதியும், ஸகல வேத ப்ரதிபாத்யையும், நித்யரூபியாயும், பாசாங்குச தாரிணியுமான* பரமசிவஸ்வரூபியான உனக்கு நமஸ்காரம்.

क्वणत्काञ्ची काञ्चीपुरमणिविपञ्चीलयझरी
शिरःकम्पा कम्पावसतिरनुकम्पाजलनिधिः ।
घनश्यामा श्यामा कठिनकुचसीमा मनसि मे
मृगाक्षी कामाक्षी हरनटनसाक्षी विहरतात् ॥ ९९ ॥

க்வணத்காஞ்சீ காஞ்சீபுரமணிவிபஞ்சீ லயஜரீ
ஶிர:கம்பா கம்பாவஸதிரநுகம்பாஜலநிதி: ।
கனஶ்யாமா ஶ்யாமா கடினகுசஸீமா மநஸி மே
ம்ருகாக்ஷீ காமாக்ஷீ ஹரநடனஸாக்ஷீ விஹரதாத் ॥ [99]

க்வணத்காஞ்சீ – சப்திக்கிற ஒட்டியாணமணிந்தவளும், காஞ்சீபுரமணிவிபஞ்சீ - காஞ்புரத்தில் வாசிக்கப்படுகிற ரத்நமய வீணையின், லயஜரீ ஶிர: கம்பா – லயத்தில் ஈடுபட்ட சிரக்கம்பத்தோடு இருப்பவளும், கம்பாவஸ்திரநுகம்பாஜலநிதி:- கம்பாநதி வாஸியும், கருணைக்கு ஸமுத்ரம் போன்றவளும், கனஶ்யாமா - மேகம்போல் ச்யாமையும், ஶ்யாமா – யௌவநம் பொருந்தியவளும், கடினகுசஸீமா - கடின ஸ்தன பிரதேசமுள்ளவளும், ம்ருகாக்ஷீ - மான் கண்போன்ற கண் உள்ளவளும், ஹரநடநஸாக்ஷீ – ஹரனுடைய தாண்டவத்திற்கு ஸாக்ஷிணியாயுமிருக்கிற காமாக்ஷியானவள், மே – எனது, மனஸி - ஹ்ருதயத்தில், விஹரதாத் - விளையாடட்டும்.

ஒட்டியாண சப்தத்துடன் கூடியவளும், காஞ்சீபுரியில் வாசிக்கப்படுகிற வீணாரஸத்தை சிரக்கம்பத்தோடு கேட்டு,

ஆனந்திப்பவளும், கருணைக்கடலும், ஹரனின் தாண்டவத்திற்கு ஸாக்ஷியுமாக விளங்குகிற காமாக்ஷி எனது மனதில் விஹாரம் செய்யட்டும்.

समरविजयकोटी साधकानन्दधाटी
मृदुगुणगणपेटी मुख्यकादम्बवाटी ।
मुनिनुतपरिपाटी मोहिताजाण्डकोटी
परमशिववधूटी पातु मां कामकोटी ॥ १०० ॥

ஸமரவிஜயகோடீ ஸாதகானந்ததாடீ
ம்ருதுகுணகணபேடீ முக்யகாதம்பவாடீ ।
முனிநுதபரிபாடீ மோஹிதாஜாண்டகோடீ
பரமசிவவதூடீ பாது மாம் காமகோடீ ॥ [100]

ஸமரவிஜயகோடீ - யுத்த ஜயத்திற்கு கோடிபோன்றவளும், ஸாதகானந்தாடீ — உபாஸகர்களுக்கு ஆனந்த பிரவாஹம் போன்றவளும், ம்ருதுகுணகணபேடீ — நல்ல குண கணங்களுக்கு பெட்டிபோலும், முக்யகாதம்பவாடீ - உயர்ந்த கதம்பவிருக்ஷவாடியுள்ளவளும், முனிநுதபரிபாடீ — ரிஷிகளால் துதிக்கப்பட்ட நடத்தையுள்ளவளும், மோஹிதாஜாண்டகோடீ — மோஹிக்கச் செய்யப்பட்ட பிரம்ஹாண்ட கோடியை உடையவளும், பரமசிவவதூடீ — பரமசிவ பார்யையுமான, காமகோடீ — காமகோடி (காமாக்ஷி தேவியானவள்,) மாம் — என்னை, பாது — ரக்ஷிக்கட்டும்.

யுத்தத்தில் ஜயக்கொடிபோல் விளங்குகிறவளும், உபாஸகர்களுக்கு ஆனந்தகாரிணியாயும், நற்குணங்களுக்கு இருப்பிடமான பெட்டிபோன்றவளும், கதம்பவனவாஸியும், ரிஷிகளால் கொண்டாடப்பட்டவளும், ப்ரம்ஹாண்டங்களை தனது மாயையால் மோஹிக்கச்செய்கிறவளுமான பரமேச்வர பத்நி காமகோடி என்னை ரக்ஷிக்கட்டும்.

परां मनसि भावयन् प्रतिदिनं तु भट्टारिकां
पठंस्तुतिमिमां जनः प्रचितनामपारायणः ।
सुधाकरकलाञ्चितः सुरकदम्बसंसेवितः
कलायमुकुलच्छविर्भवति कामकोटी स्वयम् ॥ १०१ ॥

பராம் மனஸி பாவயன் ப்ரதிதினம் து பட்டாரிகாம்
படன் ஸ்துதிமிமாம் ஜன: ப்ரசிதநாம பாராயண: ।
ஸுதாகர கலாஞ்சித: ஸுரகதம்ப ஸம்ஸேவித:
கலாய முகுளச்சவி: பவதி காமகோடீ ஸ்வயம் ॥ [101]

*பராம் - பரதேவதையான, பட்டாரிகாம் - உயர்ந்தஸ்திரீயான காமாக்ஷியை, மனஸி - மனதில், பாவயன் - த்யானம் செய்துகொண்டு, ப்ரசிதநாமபாராயண: - பரிசயம் செய்யப் பட்ட தேவீ நாமபாராயணத்தை உடைய, ஜன: - மனிதன், இமாம் - இந்த, ஸ்துதிம் - ஸ்தோத்திரத்தை, பிரதிதினம் படன் - தினமும் படித்தால் (அவன்) ஸுதாகர கலாஞ்சித: சந்திரகலையால் அலங்கரிக்கப்பட்டதும், ஸுரகதம்ப ஸம்ஸேவித: - தேவஸமூஹத்தால் ஸேவிக்கப்பட்டதும், கலாய முகுளச்சவி: - காசாம்பூமொட்டுக்கு ஸமமுமான சரீர காந்தியுடன், ஸ்வயம் - தானே, காமகோடீ பவதி - காமகோடி காமாக்ஷியாகி விடுகிறான்.*

*இந்த ஸ்துதிசதக ஸ்தோத்திரத்தை எவன் பிரதி தினம் நாம பாராயணத்துடன் சேர்த்து படிக்கிறானோ அவன் தேவர்களாலும் ஸேவிக்கப்படுவதுடன் சந்திர கலையும் காசாம் பூ தேஜஸ்ஸும் பெற்று காமகோடி காமாக்ஷியாகவே ஆகி விடுவான்.*

इति स्तुतिशतकं संपूर्णम् ॥

ஸ்துதிசதகம் முற்றிற்று.

*சுபம் !*

Printed & Published by S. Kalyanasundaram
at the Sri Janardana Printing Works Limited, Kumbakonam.